# மனித நேயச் செம்மல்
# சைதை துரைசாமி அவர்களின்
# சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்
## (பெருநகர சென்னை மாநகராட்சி)



**முனைவர் செ. இராஜேஸ்வரி,** M.A., M.Phil., Ph.D.,

*சந்திரோதயம் பதிப்பகம்*

*3/462 முதல் மாடி, கம்பர் 2வது தெரு, கம்பர் சாலை,*
*தினமணி நகர், மதுரை – 625 018, Mob. : 7010997639.*

## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மனித நேயச் செம்மல் சைதை துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும் *(பெருநகர சென்னை மாநகராட்சி)* |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| முன் பின் முகப்பு அட்டை அமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/462 முதல் மாடி,<br>கம்பர் 2வது தெரு,<br>கம்பர் சாலை, தினமணி நகர்,<br>மதுரை – 625 018<br>தொலைபேசி எண்: 7010997639 |
| பதிப்பு | : | முதல் (ஜூலை 2019) |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 94 |
| விலை | : | 150 |

- - - - -

| | | |
|---|---|---|
| *Tittle* | : | ---------------- |
| *Author* | : | *Dr. C. Rajeshwari* |
| *Wrapper Design* | : | *C. Meenatchi* |
| *Publisher* | : | *Chandrothayam Pathippagam*<br>*3/462 First floor, Kambar 2nd Street*<br>*Kambar Salai, Dinamani Nagar*<br>*Madurai – 625 018*<br>*Phone : 7010997639* |
| *Month of Publish* | : | *July 2019* |
| *Pages* | : | *94* |
| *Rate* | : | *150* |

மனித நேய சேவைக்காக பிரிட்டிஷ்
**இளவரசர் சார்லசின்** சிறப்பு அழைப்பை பெற்று
அவரோடு விருந்துண்ணும் உயர் தகுதி பெற்ற அண்ணா
திமுக வின் முதல் தியாகி எம்.ஜி.ஆரின் உண்மை வாரிசு
**சைதையார் துரைசாமி** அவர்களுக்கு வாழ்த்துக்கள்.



# அன்பு காணிக்கை

கோடிக்கணக்கான இளைஞர்களை ஒழுக்கம்,
ஆரோக்கியம், நாட்டுப்பற்று, மொழிப்பற்று என
நல்வழியில் அழைத்து சென்ற
***புரட்சித் தலைவர் பாரதரத்னா*** அவர்களின்
பொற்பாதங்களுக்கு இந்நூல்
அன்புக் காணிக்கை



# மேயர் என அறிவித்தவர் எம்.ஜி.ஆர்.

## மேயர் என ஆக்கியவர் ஜெயலலிதா

புரட்சி தலைவர் எம்.ஜி.ஆர். அண்ணா திமுகவை ஆரம்பித்த போது அக்கட்சியின் முதல் தியாகி என அறியப்பட்டவர் சைதை சா. துரைசாமி அவர்கள். கருணாநிதி 'எம்.ஜி.ஆருக்கு பைத்தியம் பிடித்துவிட்டது எலுமிச்சம்பழம் தேய்த்து குளிக்க சொல்லுங்கள்' என்று சொன்னதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் 'சிங்கத்தை அதன் குகையிலேயே சந்திக்கும்' வீரம் கொண்ட எம்.ஜி.ஆரின் அன்புத் தம்பியான சைதையார் சைதாப்பேட்டையில் நடந்த பொதுக் கூட்டத்தில் கருணாநிதிக்கு எலுமிச்சம் பழ மாலை அணிவித்து அவரிடம் ஒரு பழத்தையும் கொடுத்து 'நன்றாகத் தலையில் தேய்த்து குளியுங்கள்' என்றார். முதலில் புரியாமல் நின்றிருந்த கருணாநிதிக்கு பின்னர் மெல்லப் புரியத் தொடங்கியது. அதன்பிறகு திமுக கட்சியினரும் அவர்களின் ஏவல் துறையாக இருந்த காவல் துறையும் சைதையாருக்கு மிகவும் தொந்தரவு கொடுத்தது. அவரைக் காணாமல் துடித்த அண்ணா திமுகவினர் எம்.ஜி.ஆரிடம் தகவல் தெரிவிக்கவும் எம்.ஜி.ஆர். காவல் நிலையத்துக்குப் பேசி அவரை உயிரோடு மீட்டுக் கொண்டுவந்தார். இல்லை என்றால் காவல் நிலையத்தில வைத்து அடித்து கொன்றிருப்பார்கள். தனது அலுவலகத்தில் வைத்து அந்த வழக்கு முடியும் வரை எம்.ஜி.ஆர். சைதையாரைப் பாதுகாத்தார். வழக்கில் வென்றதும் அண்ணா திமுக கட்சி அவருக்கு ஒரு பாராட்டு விழா எடுக்க எம்.ஜி.ஆர். முடிவு செய்தார். அவரது பெயரையும் சைதை துரைசாமி என அடைமொழி கொடுத்து மாற்றினார்.

எம்.ஜி.ஆர். சைதாப்பேட்டையில் சைதை துரைசாமி அவர்களுக்கு நடந்த பாராட்டு விழா கூட்டத்தில் முதன்முதலாக ஒரு மாபெரும் சக்தியை மேடை ஏற்றினார். அவர் தான் புரட்சி தலைவி ஜெயலலிதா. செல்வி. ஜெயலலிதாவுக்கு முதல் அரசியல் மேடை சைதையாருக்கு

*நடந்த பாராட்டுக் கூட்டமே ஆகும். அவர் சைதையாரின் வீரத்தையும் துணிச்சலையும் மேடையில் வெகுவாகப் பாராட்டி பேசினார்.*

*சைதை துரைசாமி அவர்களிடம் 1981இல் எம்.ஜி.ஆர். சென்னை மாநகராட்சி ஆகிறது,* ***'நீ தான் அண்ணா திமுகா.வின் முதல் மேயர்'*** *என்றார். அதன் பிறகு பல்வேறு காரணங்களால் சென்னையில் மாநகராட்சி தேர்தல் நடைபெறவில்லை. 2011இல் தான் நடைபெற்றது. அப்போது ஜெயலலிதா அவர்கள் சைதையாரை மாநகராட்சி மேயர் தேர்தலில் நிற்க வைத்தார். சைதையார் மாபெரும் வெற்றி பெற்று* ***பெரு நகர சென்னை மேயர்*** *ஆனார். எம்.ஜி.ஆரின் வாக்கு பலித்தது. திருவாய்க்கு மறுவாய் ஏது? ஜெயலலிதா அவர்கள் மேயர் பதவியேற்பு விழாவுக்கு நேரில் வந்திருந்து சிறப்புச் செய்தார்.*

*சைதையார் ஊழலுக்கு இடம் கொடுக்காமல் பல வளர்ச்சித் திட்டங்களை அறிமுகம் செய்தார். மாநகராட்சி பள்ளிகளை சிறப்பான தனியார் பள்ளிகளின் தரத்துக்கு உயர்த்தினார். பொதுமக்களுக்கு சாலை வசதிகளையும் பூங்கா வசதிகளையும் ஏற்படுத்தி கொடுத்தார். அடுத்த தேர்தலில் அண்ணா திமுக வெற்றி பெறுவதற்கு வாய்ப்பளித்த அம்மா உணவகம் தொடங்க காரணமாயிருந்தார். இத்திட்டம் உலகளவில் பாராட்டுப் பெற்றது. அவரது வளர்ச்சித் திட்டங்களில் சிலவற்றை மட்டும் இந்நூல் விரிவாக விளக்குகிறது.*

*2016 இல் அண்ணா திமுக மாபெரும் வெற்றியைப் பெற்ற போது அமைச்சர்களும் அரசு உயர் அதிகாரிகளும் அவருக்கு மலர்ச்செண்டு கொடுத்து வாழ்த்துத் தெரிவிக்க காத்திருந்தனர். ஆனால் ஜெயலலிதா அவர்கள் 'மேயரைக் கூப்பிடுங்கள். அவரிடம் முதல் போக்கே [bouquet] பெற்று கொள்கிறேன்' என்றார். இத்தகவலை முதல்வரின் உதவியாளர் வெளியே வந்து தெரிவித்ததும் அங்கிருந்த அனைவரும் சைதையார் முதல்வரை முதலில் சந்தித்து வாழ்த்துத் தெரிவிக்க உதவியாக ஒதுங்கி நின்று வழிவிட்டனர். சைதையார் தான் சொந்தமாக நடத்தி வந்த சேவைத் திட்டமான மலிவு விலை உணவகம் தான் பின்னர்*

*செல்வி ஜெயலலிதாவின் ஆட்சியில் அம்மா உணவகம் என்ற திட்டத்துக்கு முன்னோடியாக அமைந்தது. இத்திட்டம் மக்களின் ஏகோபித்த வரவேற்பைப் பெற்றிருந்ததால் 2016இல் நடந்த சட்டமன்றத் தேர்தலின் மகத்தான வெற்றிக்கு மூல காரணமாக அமைந்தது. இதை உணர்ந்த செல்வி ஜெயலலிதா தன் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் மேயரை அழைத்து அவர் கையால் முதல் மலர்ச் செண்டைப் பெற்றுக் கொண்டார்.*

*எம்.ஜி.ஆர். மற்றும் ஜெயலலிதா ஆகிய இருவரின் அன்பையும் மதிப்பையும் ஒருசேரப் பெற்றவர் சைதையார். மனித நேய அறக்கட்டளை என்ற பெயரில் தனி அறக்கட்டளையை நிறுவி அதன் மூலமாக பல்லாயிரம் அரசு உயர் அதிகாரிகளை உருவாக்கி அவர்கள் நேர்மையாகச் செயல்பட உந்துசக்தியாக விளங்குகிறார். சுறுசுறுப்பிலும் மனிதநேயத்திலும் ஆரோக்கியம் பேணுவதிலும் இளையோர் கூட்டம் தலைமை தாங்கும் புதிய பூமியை உருவாக்குவதிலும் இவர் எம்.ஜி.ஆரின் இளைய தம்பி மட்டுமல்ல; இனிய தம்பியும் கூட.*

# உள்ளடக்கம்

# *1. அம்மா உணவகம் [அ.உ.ம்.]*

*அம்மா உணவகம் என்பதன் முதல் எழுத்தையும் கடைசி எழுத்தையும் சுருக்கி முடித்தால் **அ.உ.ம்** என வரும். இந்த **அ.உ.ம்.** என்பது தான் ஓம் என்னும் பிரணவ மந்திரம். இதில் '**அ**' என்பது சிவனையும் '**உ**' என்பது உமையம்மையையும் '**ம்**' என்பது மனிதனையும் குறிக்கிறது. இந்த ஓம் ஒலிக்கப்படும் இடங்களில் சிவ பார்வதி எனப்படும் அம்மை அப்பனின் அருள் நிறைந்து வளம் கொழிக்கும். மக்கள் வெற்றி களிப்போடு மனம் மகிழ்ந்து நோயற்ற வாழ்க்கை வாழ்வர். இதனால் தான் முதல்வர் ஜெயலலிதா அவர்கள் தம் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் மக்களைப் பார்த்து செய்வீர்களா என்று கேட்பார். அவர்களும் செய்வோம் என்பர். அங்கு லட்சக் கணக்கானோர் ஒரே நேரத்தில் ஓம் என்று ஒலிக்கும்போது பாசிட்டிவ் வைப்ரேஷன் பரவி அவரது ஆதரவான மனநிலையை உண்டாக்கி அவரது வெற்றியை உறுதி செய்கிறது. ஓம் என்னும் பிரணவ மந்திரம் அவரது வெற்றி திட்டமான அம்மா உணவகத்திலும் ஒலிக்கிறது. அகரம் உகரம் இறுதியில் மகாரப் புள்ளி ஆகிய மூன்றும் இணைந்து அம்மா உணவகத்தை உலகப் புகழ் பெற்ற திட்டமாக மாற்றிவிட்டன. சிங்கப்பூரில் நடந்த மேயர் மாநாட்டுக்கு சைதையார் சென்ற போது அவரிடம் இத்திட்டத்தைப் பாராட்டியதோடு பல மாநகர மேயர்கள் தங்களது நாடுகளிலும் இத்திட்டத்தை செயல்படுத்த அவரிடம் ஆலோசனை பெற்றனர். அவர் ஊர் திரும்பியதும் அம்மா உணவகத்தை உலகப் புகழ் பெற வைத்து விட்டீர்கள் என்று முதல்வர் ஜெயலலிதா பாராட்டு தெரிவித்தார்.*

*ஆயிரம் வாக்குறுதிகளை தேர்தல் அறிக்கையில் சொல்லி ஒரு கட்சி மக்களின் வாக்குகளை பெற்று அரசு அமைக்கலாம். அவற்றில் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியது எது என்று ஆராய்ந்து அந்த வாக்குறுதிக்கே அரசு முன்னுரிமை தரும். அவ்வாறு முன்னுரிமை அளிக்கப்பட்ட திட்டம் குறைந்த விலைக்கு உணவு வழங்கும் திட்டம் ஆகும். இத்திட்டத்தை யாரைக் கொண்டு நிறைவேற்றுவது? எங்கு உணவகத்தைத் தொடங்குவது? என்னென்ன நேரங்களில் செயல்படுத்துவது? போன்றவற்றை சைதையார் ஆராய்ந்து இதற்கான திட்டங்களை தீட்டி முதல்வர் ஜெயலலிதாவின் புகழ் விளங்கும் வகையில் அம்மா உணவகம் என்ற பெயரில் அவர்களைக் கொண்டே தொடங்கி வைத்தார். சென்னையில் உள்ள அனைத்து மண்டலங்களிலும் தொடங்கினார்.*

*மலிவு விலையில் உணவு வழங்கப்படும் என்று சொல்லி இருந்தாலும் இது நடைமுறைக்கு சாத்தியப்படுமா என்ற வினா அனைவரது உள்ளத்திலும் இருந்தது. மலிவு விலையில் உணவு வழங்கியாக வேண்டும் என்பது சைதையாரின் இலட்சியமாக இருந்தது. அந்த இலட்சியத்தின் முழுப்பலனும் அதிமுக கட்சியில் வாக்கு வங்கியில் டெபாசிட் ஆகும். அதனால் அப்போது முதல்வராக இருந்த ஜெயலலிதாவுக்கு செல்வாக்கு உயரும்; மக்களிடையே நல்ல பெயர் கிடைக்கும், தனக்கு எந்த நற்பெயரும் கிடைத்துவிடக் கூடாது என்று தன் கட்சியினர் சிலரே முயற்சி எடுப்பார்கள் என்பதும் தெரியும். இருந்தாலும் எம்.ஜி.ஆரின் விசுவாசியான சைதையார் அதிமுகவின் வளர்ச்சியில் முழு ஈடுபாடு கொண்டவர் என்பதால் அவர் தன் கட்சிக்காரரின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் தான் கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்தார்.*

**உண்மை எப்போதும் தூங்குவதும் இல்லை**

**பொய்மை எப்போதும் ஓங்குவதும் இல்லை**

*என்று எம்.ஜி.ஆர். பாடல் கூறுவது போன்று அவருடைய உண்மையான உழைப்புக்கு சட்டமன்ற தேர்தல் முடிவுகள் வந்து அதிமுக வெற்றி வாகை சூடிய போது அம்மாவிடம் இருந்த முதல் அழைப்பு சைதையாருக்கு வந்ததும் அவருக்கு*

நல்லதொரு அங்கீகாரமாக அமைந்தது. அம்மா உணவகம் வர விடாமல் முட்டுக்கட்டை போட்டவர்கள் 'பொய்மை எப்போதும் ஓங்குவதும் இல்லை' என்ற கருத்தை அந்த நேரத்தில் புரிந்துகொண்டனர்.

அம்மா சைதையாரை முதலில் அழைத்ததற்கு காரணம் இருந்தது. தேர்தல் வந்ததும் உளவுத்துறையிடம் அறிக்கைக் கேட்ட முதல்வர் ஜெயலலிதா அதில் அம்மா உணவகம் பெற்ற செல்வாக்கு ஒன்றே போதும் அவரது வெற்றியை உறுதி செய்வதற்கு என்பதை படித்து தெரிந்துகொண்டார். அவரது மக்கள் நலத்திட்டங்களில் அம்மா உணவகம் பெரும் செல்வாக்கை பெற்றிருந்தது. அம்மா உணவகம் பற்றி அரசு தனியாக எந்த செய்தித்தாளிலும் டி.வி.யிலும் விளம்பரம் கொடுக்கவில்லை. ஆனாலும் வாய்மொழியாகவே அம்மா உணவகத்திற்கான வரவேற்பு மக்களிடையே அமோகமாக பரவியிருந்தது. அம்மா உணவகம் நடத்திய மௌனப் பிரச்சாரம் வெற்றிக் கதவுகளை திறந்து வைத்தது.

**பயனளிக்கும் திட்டங்கள்**

தேர்தல் வாக்குறுதிகளில் குறைந்த விலைக்கு உணவு வழங்கும் திட்டம் மக்களின் வரவேற்பை பெறுவதோடு முதல்வர் ஜெயலலிதா அவர்கள் மீண்டும் ஆட்சிக்கு வருவதற்கு நல்வாய்ப்பாக அமையும் என்பதை உணர்ந்த சைதையார் அதனை முதலில் செயல்படுத்த முனைந்தார். அவருடைய முனைப்பும் செயல்பாடும் அம்மாவுக்கு தொடர் வெற்றியை மறு தேர்தலில் பெற்று தந்தது. இந்த திட்டம் ஏறத்தாழ எம்.ஜி.ஆரின் சத்துணவுத் திட்டத்துக்கு நிகரானது. சத்துணவுத் திட்டம் எம்.ஜி.ஆருக்கு தொடர் வெற்றியை கொடுத்தது. அதுபோல இத்திட்டமும் எம்.ஜி.ஆரை போல அம்மாவுக்கும் தொடர் வெற்றியைக் கொடுத்தது. இதனால் இருவரும் இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகு செல்லும்வரை முதலமைச்சராகவே இருந்தனர். இந்த திட்டத்தை தேர்ந்தெடுத்து செயல்படுத்தியதால் சைதையார் முதல்வர் ஜெயலலிதாவுக்கு அழியாப் புகழை பெற்றுத் தந்தார்.

## சைதையாரின் நீண்ட காலம் பயன் தரும் உடனடித் திட்டம்

*அரசின் திட்டங்கள் பலவகைப்படும். சில நீண்டகால திட்டங்கள் உடனடி பலன் அளிக்காது. அத் திட்டம் தொடங்கப்பட்ட காலத்தில் மக்களுக்கு அதன் விளைவு பற்றி தெரிய வாய்ப்பில்லாத காரணத்தால் மக்கள் வரவேற்பு அத்திட்டத்துக்கு அப்போதைக்கு இருக்காது. வேறு சில திட்டங்கள் உடனடி திட்டமாக இருக்கும். இதனால் மக்களுக்கு பலன் உடனடியாக போய் சேர்வதால் மக்களின் வரவேற்பு அமோகமாக இருக்கும். இத்திட்டத்தால் அரசுக்கும் நல்ல பெயர் கிடைக்கும். எதிர்க்கட்சியினரின் எதிர்ப்பு அரசியல் ஒடுக்கப்படும். இதர கட்சியினரின் ஆதரவு பெருகும். இதனை நன்குணர்ந்த சைதையார் உடனடி திட்டமாக ஒன்றை நிறைவேற்றி அதனை நீண்ட காலத்துக்கும் பயன் தரத்தக்க வகையில் செயலாற்றினார். ஏனெனில் ஒரு அரசியல் கட்சி தொடர்ந்து வெற்றி பெற வேண்டும் என்றால் மேற்குறிப்பிட்ட இரு வகை திட்டங்களையும் நிறைவேற்ற வேண்டும். உடனடி திட்டங்கள் அந்த ஐந்து ஆண்டு கால அதிகாரத்துக்கு உதவினாலும் நீண்ட கால திட்டங்கள் திரும்ப திரும்ப அந்தக் கட்சி ஆட்சியை பிடிக்க உதவும். எனவே, சைதையார் குறைந்த விலைக்கு உணவு வழங்கினால் மக்கள் உடனடி நன்மை பெறுவர் அவர்கள் உடல் உரமேறும் உள்ளம் குளிரும் இதுவே நீண்ட காலத்துக்கு நிறைவேற்றப்படும்போது அவர்களின் வாழ்வில் சேமிப்பும் சிறப்பும் முன்னேற்றமும் உண்டாகும் என்று கருதினார். மேலும் உடனடியாக பலனளிக்கும் இது போன்ற திட்டங்கள் நீண்ட காலத்துக்கு செயல்படும்போது அது மக்களியடையே பெரிய சமூக பொருளாதார மேம்பாட்டைக் கொண்டு வரும்.*

## அடிப்படைத் தேவை

*மனிதனின் அடிப்படை தேவைகள் மூன்று; அவற்றில் முதன்மையானது உணவு. ஆக உடனடியாக உணவு அளிக்கும் திட்டமே ஒரு நாளைக்கு மூன்று வேளையும் ஒருவனை நன்றி கூற வைக்கும் திட்டம் ஆகும். எனவே, சைதையார் ஏழை எளியவருக்கு ஒரு நாளைக்கு மூன்று வேளையும் அரசு உணவளிக்கும் திட்டத்தை உறுதி செய்ய வேண்டும் என*

திட்டமிட்டார். இந்த மூன்று வேலை என்பதற்கு ஏன் அழுத்தம் தருகிறோம் என்றால் கோயில் போன்ற இடங்களில் ஏழை எளியோருக்கு அன்ன தானம், கறி விருந்து என நடப்பது எல்லாம் ஒரு வேளை மட்டுமே நடக்கும். அம்மா உணவகம் பெற்ற தாயை போல மூன்று வேளையும் உணவளிக்கும்.

தமிழகத்தில் இப்போது பெரும்பாலும் எல்லோருக்கும் ஏதோ ஒரு வேலை கிடைத்துவிடுகிறது. ஓரளவுக்கு சமபளமும் கிடைக்கிறது. இந்த வேலை வாய்ப்பு அவரவர் வாழும் இடத்துக்கு அருகில் கிடைப்பதில்லை. வீட்டு வாடகை உயர்வு காரணமாக பலர் நகருக்கு வெளியே போய் குடியேறுகின்றனர். அவர்கள் அதிகாலை புறப்பட்டு இரவானதும் வீட்டுக்கு செல்கின்றனர். சிலர் வெளியே வேலையாக ஆங்காங்கே சுற்றி வருகின்றனர். இவர்களுக்கு கையில் சொற்ப பணம் இருக்கும் அதனைக் கொண்டு மூன்று வேளையும் வயிறார சாப்பிட இயலாது. சில வேளை டீ குடிப்பார்கள் ஒரு வேளை சாப்பிடுவார்கள். கால் வயிறு அரை வயிறு சாப்பிட்டுவிட்டு நாள் முழுக்க பசித்த வயிறோடு வேலை பார்ப்பார்கள். இந்த பசிக் கொடுமை தீர பசித்த வாய்க்கு சோறு போடும் பெரும்பணியில் தீவிரமாக ஈடுபட்டு திட்டமிட்டு செயலாற்றினார் சைதையார்.

பசி வந்திட பத்தும் பறந்து போகும் என்பதை உணர்ந்த சைதையார் இல்லாதவருக்கும் எளியவருக்கும் மூன்று வேளையும் உணவு கிடைக்கும் அம்மா உணவகம் திட்டத்தை நடைமுறைப்படுத்தினார். கையில் பத்து பைசா இல்லையென்றாலும் பல லட்சம் ரூபாய் வைத்திருந்தாலும் பசி தீர வயிற்றுக்கு உணவு இல்லையென்றால் ஒரு மனிதனுக்கு பல்வேறு உடல் உபாதைகள் வருவது உறுதி. பசிக்கு ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் கிடையாது. அது எல்லோரையும் ஒரே மாதிரியே தாக்குகிறது. அதனால் தான் மகாகவி பாரதியார்

**தனி யொருவனுக்கு உணவில்லை என்றால்**

**ஜகத்தினை அழித்திடுவோம்**

என்றார்.

**வயிற்றுக்கு உணவிட வேண்டும் – இங்கு**

**வாழும் மனிதருக்கெல்லாம்**

*என்றார். அவர் வழியில் சிந்தித்த சைதையார் பசியினால் ஒருவன் வாடக் கூடாது என்பதால் உணவு தேவைப்படுவோரின் தன்மானமும் கெட்டுவிடக் கூடாது என்பதை கருத்தில் கொண்டு குறைந்த கட்டணத்தில் உணவு வழங்கும் திட்டத்தை நடைமுறைப்படுத்தினார். இதனால் தினமும் நான்கு இலட்சம் பேர் பயன்பெற்றனர். இம்மாநிலத்தில் பட்டினிச் சாவு என்பதே இல்லை என்ற நிலைக்கு தமிழகத்தின் மாண்பை உயர்த்தி காட்டியவர் சைதையார். பசித்தோருக்கு உணவு வழங்கி அவரை உயிர்ப்போடு உலவ வைத்த சைதையார் .*

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**

*என்று மணிமேகலை காப்பியம் கூறும் கருத்தை மெய்ப்பித்தவர் ஆவார்.*

**காலை உணவால் கிடைக்கும் மகிழ்ச்சி**

*மலிவு விலையில் உணவு கிடைத்ததால் தமிழகத்தில் ஏழை எளிய மக்கள் காலை உணவை தவிர்க்காமல் உண்ணும் நல்ல பழக்கத்தை கடைப்பிடிக்கத் தொடங்கினர். இத்திட்டம் காலை உணவை தவிர்க்கும் பலரை அந்த கெட்ட பழக்கத்தில் இருந்து விடுவித்தது. பலர் காலையில் காபி குடித்துவிட்டு உணவு சமைக்கும் வரை காத்திருக்கும் பொறுமை இல்லாமல் வேலைக்கு செல்லும் அவசரத்தில் உணவை விரும்பாமல் வேலைக்குப் புறப்பட்டவர்கள் இப்போது அம்மா உணவகத்தில் நின்றபடி ஐந்து இட்லியை வாங்கி சாப்பிட்டுவிட்டு வயிறு நிறைந்த சந்தோஷத்தில் வேலைக்கு செல்கின்றனர். பசியோடு வேலை பார்க்கும்போது உள்ளுறுப்புகள் வேலை செய்ய தேவையான சத்து கிடைக்காது. அவற்றின் செயல்பாடுகளில் கோளாறுகள் தோன்றும் வயிற்றில் சுரக்கும் அமிலத்தால் அல்சர் போன்ற வயிற்றுப்புண், வயிற்றெரிச்சல் ஏற்படும். கோபம் அதிகமாக வரும். வேலை சொல்கின்ற அல்லது வேலையில் திருத்தம் சொல்கின்ற மேலதிகாரிகள் மீது ஆத்திரம் உண்டாகும்.*

வாக்குவாதம் உண்டாகும் வேலையை விட்டு வேறு வேலை தேடி செல்வதுண்டு. நிரந்தரமில்லாத சூழ்நிலையால் மன அழுத்தம் உண்டாகும். அதுவே வயிறு நிறைந்துவிட்டால் மேலதிகாரிகளின் வார்த்தைகளைப் பொறுமையாக கேட்கும் மனநிலை உண்டாகும். அப்போது வேலையில் ஆர்வமும் ஈடுபாடும் அதிகரிக்கும். சம்பள உயர்வு மனமகிழ்ச்சி, வீட்டினர், நண்பர் ஆதரவு என வாழ்க்கை முழுமை அடையும்.

பொதுவாக தமிழகத்தின் ஏழை எளிய மக்கள் இன்று மன மகிழ்ச்சியோடு வாழ்வதற்கு எம்.ஜி.ஆர். ஆரம்பித்து வைத்த சத்துணவு திட்டமும், அம்மா உணவகமும் முக்கிய காரணங்கள் ஆகும்.

**பட்டினியால் பெருகும் சமூக விரோத செயல்கள்**

ஒளிவிளக்கு படத்தில் திருடனாக நடித்த எம்.ஜி.ஆர். ‘பசிக்காக நான் அஞ்சு வயசில திருடினேன்’, என்பார். ஐந்து வயதில் ஒரு பிள்ளை பட்டினியோடு இருந்தால் அதை சமூக விரோதச் செயல்களில் எளிதாக ஈடுபடுத்திவிடலாம். வயிற்று பசியாவது தீருமே என்று ஏழு வயதில் எம்.ஜி.ஆரையும் தாயார் சத்யபாமா நாடகக் கம்பெனியில் சேர்த்து விட்டார். அப்போது எம்.ஜி.ஆரின் சத்துணவு திட்டமும் அம்மா உணவகமும் இருந்திருந்தால் எம்.ஜி.ஆர். என்ற சிறுவன் ஏழு வயதில் தன் தாயைபிரிந்து போயிருக்க மாட்டார். பலர் பசியோடு திரியும் சிறு பிள்ளைகளை ஏமாற்றி திருட்டு வேலையிலும் பிக் பாக்கெட் அடிக்கவும் பயிற்சி அளிக்கின்றனர். வயிற்றுப் பாட்டுக்காக பலர் ஈனத் தொழிலில் தள்ளப்படுகின்றனர் என்பதை நாம் அறிவோம். பசிக்கு ஒரு ரொட்டி, பன் வாங்கி கொடுத்தால் கூட பிள்ளைகள் அதற்கு ஆசைப்பட்டு சமூக விரோதிகள் சொல்வதைச் செய்வர். ஆனால் அம்மா உணவகம் வந்த பின்பு அந்த நிலை கிடையாது. பசியை போக்க எவரும் திருட்டுகளில் ஈடுபடுவதில்லை. ஐந்து ரூபாய்க்கு வயிறார சாப்பிட்டுவிட்டு ஒழுங்காக ஒரு வேலைக்கு போகின்றனர். ஒழுக்கத்திலும் உழைப்பிலும் நம்பிக்கை உடையவருக்கு அம்மா உணவகம் பேருதவி புரிகிறது.

## இளைஞர் நல மேம்பாடு

*அம்மா உணவகம் வந்த பின்பு இளைஞர்கள் கண்ட கண்ட இடங்களிலும் விற்பதை சாப்பிட்டு உடலை கெடுத்துக்கொள்வது கிடையாது. பெண்களைக் கொண்டு நடத்தப்படும் அம்மா உணவகம் சுத்தம் சுகாதாரம் என்பதை தம் இரு கண்ணாக மதிக்கிறது. சிசிடிவி கேமரா மூலமாக அனைத்தும் கண்காணிக்கப்படுவதால் சமையல் செய்வோரும் பரிமாறுவோரும் சுத்தமாக காரியங்களை செய்கின்றனர். இதனால் அம்மா உணவகத்தில் சாப்பிடும் மக்கள் நோய்வாய்ப்படுவதில்லை. வருடம் முழுக்க ஏழை எளிய மக்கள் சாப்பிட வேண்டும். ஒரு நாள் கூட அவர்களை பட்டினி போட்டு விடக்கூடாது என்பதில் கவனம் செலுத்தும் சைதையார், அம்மா உணவகத்துக்கு விடுமுறை விடுவதே கிடையாது. மகளிர் குழுவை சேர்ந்த ஆட்கள் மாறி மாறி வேலைகளை செய்கின்றனர்.*

## மகளிர் நல மேம்பாடு

*தாயுள்ளத்தோடு பணி புரியும் மகளிர் சுய உதவிக் குழுக்களிடம் நிர்வாகத் திறனும் பளிச்சிடுகிறது. இந்த அம்மா உணவகத்தால் இவர்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்துவிட்டது. ஒரே நாளில் இத்திட்டத்தின் மூலமாக 12,000 க்கும் மேற்பட்ட பெண்களுக்கு வேலை கிடைத்தது. எம்.ஜி.ஆர். ஆரம்பித்த சத்துணவு திட்டத்தில் பத்தாயிரம் பெண்கள் ஒரே நாளில் [அரசு] வேலை பெற்றனர். அது ஒரு ரிக்கார்டு. அது போல சைதையாரும் 12,000 பேருக்கு அம்மா உணவகம் மூலமாக வேலை கொடுத்திருக்கிறார். இதனால் women empowerment எனப்படும் பெண்களைச் சக்தி மிக்கவராக்கும் பணியும் நடைபெற்றுள்ளது. அதிகம் படிக்காத பெண்களும் தினமும் தம்மால் சுயமாக வேலை செய்து சம்பாதிக்க முடியும் என்ற நிலை உருவாகியுள்ளது. இந்த பெண்கள் தம் வருமானத்தைக் கொண்டு தம் குடும்பத்தின் தேவைகளை நிறைவு செய்கின்றனர். இவர்களுக்கு சமுதாயத்தில் மதிப்பும், பொருளாதாரத்தில் சுய சார்பும் மேம்பாடும் ஏற்பட்டுள்ளது. உணவு உண்பவரின் வாழ்த்துக்களும் கிடைக்கிறது.*

***பசியினால் அழிவன யாவை?***

*நீதி இல்லையென்று மதுரையை அழித்தாள் கண்ணகி. உணவில்லை என்று உலகை அழிக்க சொன்னான் மீசைக் கவிஞன். இவ்வளவு கோபமும் எதனால் வருகிறது? பசி அதிகமானால் ஒருவன் தன்மானத்தை இழந்து எதனையும் செய்ய துணிவான். அவனது குலச் சிறப்பு கெட்டு போகும்படியான செயல்களில் ஈடுபடலாம். அவன் கற்ற கல்வி மறந்து போகும். அதுவரை தன்னிடம் இருந்ததை கேட்பவருக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுத்து வந்த தர்மவான் கூட பசி வந்த நிலையில் இல்லை போ என்று எரிந்து விழக்கூடும்.*

*புத்திசாலியான ஒருவனுக்கு பசிக்கு சோறு இல்லையென்றால் அப்போது அவனது புத்திக்கூர்மை மழுங்கிவிடுவதுண்டு. தானம் தவமும் அழிந்து போகும். ஒருவனுடைய தகுதி உயர்வும், தேடி உதவும் தாளான்மை பண்பும் மறைந்துவிடும். இயற்கையாக பெண்ணின் மீது கொள்ளும் காதலும் காமமும் இல்லாமல் போய்விடும். இதனால் பசியைப் பிணி, ஒரு நோய் என்றனர் நம் முன்னோர். இத்தனை இழப்புகளும் கேடுகளும் ஏற்படாமல் இருக்க மக்களுக்கு குறைந்த விலையில் சத்துள்ள உணவை மூன்று வேளையும் அம்மா உணவகம் மூலமாக அறிமுகம் செய்தார் மனிதநேயத் திலகம் சைதையார்.*

***ஊக்கம் அளிக்கும் உணவுகள் [Functional foods]***

*அம்மா உணவகத்தில் வழங்கப்படும் உணவுகள் சத்துள்ளனவாக இருந்தால் மட்டுமே அவற்றை சாப்பிடுவோருக்கு அது வேலை செய்யும் ஆற்றலை கொடுக்கும். அவர்கள் உடல் உழைப்பாளிகளாக இருந்தாலும் உட்கார்ந்து வேலை செய்வோராக இருந்தாலும் அவர்கள் சோர்வடையாமல் உற்சாகத்துடன் பணி செய்ய அம்மா உணவகத்தின் உணவு இருக்க வேண்டும் என்பதில் சைதையார் அதிக அக்கறை எடுத்துக்கொண்டார். உணவும் ஆரோக்கியமும் அவருக்கு தலைகீழ்ப்பாடம். ஆதலால் மிகுந்த கவனத்துடன் உணவு வகைகளை தெரிவு செய்தார்.*

*அம்மா உணவகத்தில் அன்றாடம் தொலை தூரப் பகுதிகளில் இருந்து சென்னை மாநகருக்கு வேலைக்கு வரும் கூலிக்காரர்கள், சுமை தூக்குவோர், ஆட்டோ ரிக்ஷா ஓட்டுவோர், எலெக்ரிஷன், பிளம்பர், கட்டிட தொழிலாளர், இயந்திரம் பழுது நீக்குவோர், உதவி இயக்குனர், சினிமாவில் சேர வேண்டி வாய்ப்புக்காக அலைவோர், நேர்முகத் தேர்வு மற்றும் வேலை வாய்ப்புக்காக சென்னை வந்திருப்பவர், துப்புரவு பணியாளர், சாலைப்பணி செய்வோர், காவல் பணி செய்யும் செக்யூரிட்டிகள், வெளி மாநிலத்தைச் சேர்ந்தோர் என பலரும் தினமும் அம்மா உணவகத்தில் பசியாறுகின்றனர். எனவே உணவு உழைப்புக்கேற்ற சத்தும் ஆற்றலும் தரும் வகையில் சைதையார் திட்டமிட்டார்.*

**இதனை இவன் முடிக்கும் என்றாய்ந்து....**

*அம்மா உணவகத்தை யாரைக் கொண்டு நடத்துவது என்ற வினா எழுந்த போது எம்.ஜி.ஆரின் சத்துணவுத் திட்டத்துக்கு கைக் கொடுத்த மகளிரே சைதையாருக்கும் கை கொடுத்தனர். மகளிர் குழுக்களிடம் சமையல் பணியை ஒப்படைக்கலாம். தாய்மார் இப்பணியை செவ்வனே செய்வார்கள். பொறுப்போடும், கருத்தோடும் செய்வார்கள் என்று சைதையார் நம்பினார். அவர்களுக்கு சுகாதாரமாக சமைப்பது குறித்து பயிற்சி அளிக்கப்பட்டது. கையுறை தலை வலை போன்றவை வழங்கப்பட்டன. பாத்திரங்கள் அளிக்கப்பட்டன. ஒரு சமையலும் ஒரு உதவியாளும் நியமிக்கப்பட்டனர். இடத்தை யார் வழங்குவது எங்கு அம்மா உணவகத்தை அமைப்பது என்ற வினா எழுந்த போது சைதையார் ஆட்சியர் அலுவலகம், பஞ்சாயத்து ஒன்றிய அலுவலகம் போன்ற முக்கிய அரசு அலுவலகங்கள், அரசு மருத்துவமனை மற்றும் மக்கள் அதிகமாக கூடும் இடங்களில் அம்மா உணவகம் தொடங்கலாம் என இடங்களை வரையறுத்தார். அவருடைய ஆலோசனைகள் அரசு உயர் அதிகாரிகள் இடையே நன்மதிப்பைப் பெற்றன.*

**சோதனை ஆய்வு**

*அம்மா உணவகம் சைதையாரின் மனதில் நீண்ட காலம் இருந்து வந்த கனவுத் திட்டம் ஆகும். அதை அவர்*

முதலில் சிறிய அளவில்  சோதனை முயற்சியாகச் செய்து பார்த்தார். அது வெற்றி பெற்றதும்தான் இத்திட்டத்தை வெற்றிகரமாக செயல்படுத்த முடியும் என்று அம்மாவிடம் தெரிவித்தார். 2006இல் சைதாப்பேட்டையில் உள்ள பூக்கார தெருவில் சைதையார் மலிவு விலை உணவகம் ஒன்றை தொடங்கினார். இட்லி, பொங்கல் என எந்த உணவு வாங்கினாலும் ஐந்து ரூபாய் மட்டுமே என ஒரே விலை வைத்து விற்றார். கை நஷ்டம் வரவில்லை அதே சமயம் கூட்டம் மொய்த்தது. மக்களிடம் மலிவு விலை உணவுக்கான தேவையும் அமோக வரவேற்பும்  இருப்பதை அறிந்து முதல்வரிடம் சைதையார் தெரிவித்தார்.

**உணவால் மக்கள் மனம் கவர்ந்த முதல்வர் மூவர்**

தமிழகத்தில் மக்கள் மனதில் நிற்கும் முதல்வர் அனைவரும் உணவு பொருளால் மனம் கவர்ந்தவர்களே என்பதை எடுத்துக் கூறினார். காமராஜர் மானணவர்களுக்கு மதிய உணவு அளித்தார். அண்ணா ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி கொடுத்தார். எம்.ஜி.ஆர். சத்துணவுத் திட்டம் கொண்டு வந்தார். அது போல நீங்களும் உணவு வழங்கும் திட்டம் ஒன்றை அறிமுகம் செய்தால் மக்கள் உங்களை அன்னபூரணியாக போற்றுவர் என்றார். முதல்வர் சைதையாரின் வார்த்தைகளில் இருக்கும் உண்மையை உணர்ந்து சரி 1000 இடங்களில் தொடங்குவோம், மாநகர பட்ஜெட்டில் அறிவித்து விடுங்கள் என்றார். சொந்த கட்சியினர் சைதையார் முதல்வரிடம் பெற்று வரும் செல்வாக்கை அறிந்து மனம் குமைந்தனர். இத்திட்டம் செயல்படக் கூடாது என்று முட்டுக்கட்டை போட்டனர். ஆனால் இறைவன் ஏழைகளுக்கு உணவளிக்க விரும்பும் சைதையார் மற்றும் அம்மா பக்கம் இருந்ததால் இத்திட்டம் வெற்றி பெற்றது.

***திட்டத்தின் வெற்றிக்குரிய காரணங்கள்***

ஒரு திட்டம் வெற்றி பெற அது முதலில் மக்களின் தேவைகளை நிறைவு செய்வதாக இருக்க வேண்டும். அடுத்தது - இத்திட்டத்தால் ஒவ்வொரு மனிதருக்கும் ஏதேனும் தனிப்பட்ட ஆதாயம் கிடைக்க வேண்டும்.

*மூன்றாவது - பயனாளி எதையாவது சாதிக்கவும் மனம் மகிழ்ச்சி பெறவும் இத்திட்டம் உதவ வேண்டும். இம்மூன்றும் இருந்தால் மட்டுமே ஒரு திட்டம் மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெற்று எதிர்பார்த்த பலனைத் தரும். அந்த வகையில் சைதையார் முனைந்து கொண்டு வந்த இத்திட்டம் அடிப்படை தேவையான பசியை போக்கியது. உணவின் விலை மலிவாக இருந்ததால் பணம் சேமிக்க உதவியது. மூன்றாவது ஊட்டச்சத்து மிகுந்து இருந்ததால் ஊக்கத்தோடு உழைக்கவும் கூடுதல் வருமானம் பெறவும் உடல் ஆரோக்கியமாக இருக்கவும் உதவி பயனாளிக்கு மன மகிழ்ச்சியை அளித்தது. இவ்வாறு ஒரு திட்டத்தின் மூன்று அம்சங்களையும் நிறைவேற்றும் வகையில் சைதையார் நல்ல ஆரோக்கியமான உணவை குறைந்த விலையில் வழங்க வகை செய்தார்.*

*எம்.ஜி.ஆர். சத்துணவுத் திட்டம் கொண்டு வரும்போது எடுத்துக்கொண்ட முயற்சிகளில் சிறிதும் குறைவின்றி சைதையார் முயற்சி எடுத்து செயல்படுத்தினார். தானே முன்னின்று ஒவ்வொன்றையும் நேரில் கண்டு கேட்டு விசாரித்து முடிவெடுத்தார். ஒரு செயலில் இறங்கிவிட்டால் அதை முடிக்காமல் விட மாட்டார். ஓய்வின்றி பணியாற்றும் செயல்திறனும் கொள்கை பிடிப்பும் உடையவர். எனவே இத்திட்டத்தின் வெற்றிக்கு பின்னால் அவருடைய மாபெரும் உழைப்பும் முனைப்பும் உள்ளதை எவரும் மறுக்க இயலாது. நல்ல திட்டத்தை கண்டறிவதும் அதை சிறப்பாக செயல்படுத்துவதும் நல்ல தலைவருக்கு உரிய பண்புகள் ஆகும். அந்த வகையில் தடைகளை உடைத்து எடுத்த செயலை முடிப்பதில் சைதையார் திறன்மிகு நிர்வாகியும் ஆவார்.*

### ***உணவு தரும் உரம்***

*உடல் ஆரோக்கியத்தை சித்தர் முறையில் பின்பற்றி வரும் சைதையார் இந்த அம்மா உணவகத்தில் உண்பவர்களுக்கு உடல் உரமாக வேண்டுமே தவிர பாரமாகக் கூடாது என்று கருதினார். எனவே எளிய பாரம்பரிய உணவாக இட்லியையும் அதை வேலைக்குப் போகும் பரபரப்பில் வேகமாக சாப்பிட்டு விக்கி கொள்ளக்கூடாது என்பதற்காக*

*துணை உணவாக சாம்பாரையும் தெரிவு செய்தார். மதியம் பசி தாங்கக்கூடிய உணவாக சோறையும் அத்துடன் பருப்பு, காய்கறி, மல்லி, மஞ்சள், சீரகம், மிளகாய்வற்றல், உப்பு ஆகிய சத்துள்ள பொருட்கள் [condiments]கலந்து தயாரிக்கும் சாம்பாருடன் இணைந்து சாம்பார் சாதமாக கொண்டு வந்தார். அத்துடன் சீரணத்துக்கு உதவக்கூடிய தயிர் சாதத்தையும் சேர்த்து விற்க ஏற்பாடு செய்தார். இவை இரண்டும் முழுமையான சாப்பாடாக அமைந்து விடும். உழைப்பவருக்கு உடலில் சக்தி தரும். மாலையில் சத்து மிகுந்த உணவு செரிப்பதற்கு எளிதான சப்பாத்தியை அறிமுகம் செய்தார். சென்னை முழுக்க எளிய மக்கள் உள்ளம் குளிர்ந்தனர். இந்த உடனடி திட்டம் பலருக்கும் நீண்ட கால சேமிப்பை வழங்கியது.*

***பாரம்பரிய உணவுகள்***

*மனிதனின் உடல் உழைப்புக்கு இன்றியமையா தேவை கார்போஹைடிரேட்டு என்பதால் காலையில் மனிதன் அரிசி உணவே உட்கொள்ள வேண்டும். மூளை உழைப்புக்கு புரதம் தேவைப்படுவதால் பயறு பருப்பு வகைகளை சேர்த்துக்கொள்ள வேண்டும். எனவே அரிசியும் உளுந்தும் சேர்த்து அரைத்து புளிக்க வைத்து ஆவியில் வேக வைத்த இட்லியை காலை உணவாக்க முடிவுசெய்தார். புளிக்க வைத்த மாவினால் செய்யப்படும் உணவினால் நல்ல பேக்டீரியாக்கள் உருவாகி செரிமாணத்துக்கும் சத்துக்கள் உடலில் உறிஞ்சப்படுவதற்கும் உதவும். இத்துடன் இரும்புச் சத்து மிக்க கத்திரிக்காய், முருங்கைக்காய் போன்ற காய்களும் சேர்த்த பருப்பு சாம்பாரும் இணைந்து ஒரு சரிவிகித உணவாக உருவாயிற்று. குறைந்த விலைக்கு கொடுக்கிறோம் என்பதற்காக ஏனோதானோவென்று செய்யாமல் சமத்துவ சிற்பி சைதையார் செய்வன திருந்தச் செய் என்ற ஆன்றோர் வாக்கின்படி சிறப்பாகத் திட்டமிட்டு செயல்படுத்தினார்.*

*மலிவு விலை உணவகம் தொடங்க வேண்டும் என்ற எண்ணம் வந்ததும் அதிகாரிகளிடம் கூட்டம் நடத்தி அதை பற்றி தெரிவித்து ஆலோசனை கேட்டார். யாரும் உருப்படியான யோசனைகளை சொல்லவில்லை. இந்த*

*திட்டத்தை முறியடிக்கவே எண்ணினர். சரி இது வேலைக்கு ஆகாது என்று முடிவு செய்த சைதையார்,*

**எண்ணி துணிக கருமம் துணிந்த பின்**

**எண்ணுவம் என்பது இழுக்கு**

*என்ற வள்ளுவரின் வழியில் வாழ்க்கை நடத்துவதனால் தானே களத்தில் இறங்கினார். ஒரு கிலோ அரிசிக்கு எத்தனை இட்லி வரும் என்பதை நேரில் கண்டறிந்தார். சுமார் 70 கிராம் எடையுள்ள அறுபது இட்லி கிடைக்கும் என்பது தெரிய வந்தது. அறுபது இட்லி விற்றால் அறுபது ரூபாய் கிடைக்கும். அரிசி மட்டும் அரசு மானியமாக கொடுத்துவிட்டால் சாம்பாருக்கான செலவு, சமையல் எரிபொருள் சம்பளம் ஆகியவற்றை பார்த்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்தார். அடுத்து ஒரு படி அரிசியில் எத்தனை சாதம்? என்னென்ன சாதம் கிளரலாம்? என்பதை செய்முறை சோதனை மூலமாக அறிந்தார். ஒரு கிலோ அரிசியில் 12 சாதம் கட்டலாம். அதுவும் அறுபது ரூபாய். சாம்பார் சாதம், எலுமிச்சை சாதம், கறிவேப்பிலை சாதம் என முடிவு செய்தார். முதலில் இது மட்டும் போதும் எனத் தொடங்கிய இவர் பின்னர் “பாவம் இரவு பட்டினியால் மக்களை படுக்கவிடக் கூடாதே” என முடிவு செய்து இரண்டு சப்பாத்தியும் பருப்பு கடைசலும் சேர்த்து மூன்று ரூபாய்க்கு விற்கும் திட்டத்தை தொடங்கினார்.*

*சைதையாரே நேரில் சென்று பார்த்து அனைத்தையும் தெரிந்துகொண்டதால் அவரால் இத்திட்டத்தை துணிவாக தொடங்கவும் அதிகாரிகளிடம் அது குறித்து விவாதிக்கவும் முடிந்தது. முதலில் நிதி செயலர் சண்முகத்தை சந்தித்து இத்திட்டத்தின் நிதி நிலையை விளக்கியவர் அடுத்து முதல்வரின் தனி செயலரை பார்த்து மக்களிடையே இத்திட்டம் பெறப்போகும் வரவேற்பை விளக்குகிறார். பின்பு மாநகராட்சி அதிகரிகளையும் அதிமுக கட்சியினரையும் பார்த்து இத்திட்டத்தை வெற்றிகரமாக செயல்படுத்துவது எப்படி என்று பேசுகிறார். படிப்படியாக பேசி பேசி தான் நினைத்ததை மக்களுக்கு நன்மை தருவதை சாதித்து காட்டுகிறார்.*

***தாய்வீடு***

*அம்மா உணவகத்தில் காலையில் கிடைக்கும் இட்லியின் விலை ஒரு ரூபாய். இதுவே மற்ற உணவகங்களில் பத்து பனிரெண்டு ரூபாய்க்கு கூடுதல் சட்னியுடன் விற்கப்படுகிறது. அங்கு போய் இரண்டு இட்லி வாங்கி சாப்பிட முடியாமல் பசியோடு செல்வொருக்கு இந்த அம்மா உணவகம் தாய்வீடாக அமைகிறது. ஐந்து ரூபாய் கொடுத்தால் ஐந்து இட்லி சாப்பிட்டுவிட்டு அம்மாவையும் சைதையாரையும் மனதார வாழ்த்தி செல்கிறார்கள் சென்னை வாழ் மக்கள். மதிய உணவாக ஐந்து ரூபாய்க்கு சாம்பார் சாதமும் மூன்று ரூபாய்க்கு தயிர் சாதமும் விற்கப்படுகிறது. பத்து பதினைந்து ரூபாய் இருந்தால் ஒருவர் வயிறு நிறைய சாப்பிட்டுவிட்டு ஐந்தாறு மணி நேரம் சோர்வடையாமல் வேலை செய்யலாம். இரவில் மூன்று ரூபாய்க்கு சப்பாத்தி விற்பதால் பதினைந்து ரூபாய்க்கு ஐந்து சப்பாத்தி சாப்பிட்டுவிட்டு நிம்மதியாக உறங்கலாம். குத்து பட்டவன் உறங்கினாலும் குறை வயிற்றுக்காரன் உறங்கமாட்டான் என்பது பழமொழி. ஆனால் அம்மா உணவகத்தில் இரவு சப்பாத்தி சாப்பிடுகிறவன் வயிறு நிறைந்து நன்றாக உறங்குவான். அம்மா உணவகம் அம்மா வீடாக பலருக்கு திகழ்கிறது.*

***அனைத்து தரப்பினருக்கும் பலனளித்த திட்டம்***

*காலையில் விரைவாக வேலைக்கு செல்வோர் சாப்பாட்டை கட்டி எடுத்துக்கொண்டு போனால் பதினோரு மணி வாக்கில் கெட்டு நாறிப் போகும். இவர்கள் அம்மா உணவகத்தில் இனி சாப்பிட்டு பசியாறலாம். கட்டி கொடுத்த புளிச்சோறும், எலுமிச்சைச் சோறும் சாப்பிட்டால் சிலருக்கு தண்ணீர் தாகம் எடுத்து வேலை பார்க்க விடாது. இவர்கள் குறைந்த விலையில் இரண்டு சாம்பார் சாதமும் ஒரு தயிர் சாதமும் வாங்கி சாப்பிட்டால் வயிறும் மனமும் குளிர்ந்துவிடும். உட்கார்ந்து சாப்பிட இடமும் நேரமும் இல்லாமல் பைக்கில் பறக்கும் சேல்ஸ்மேன்கள் விற்பனை ஏஜெண்டுகள் போன்றோர் அம்மா உணவகத்தில் நின்ற படியே நிதானமாகச் சாப்பிட்டுவிட்டு போய்விடலாம்.*

கண்ட கண்ட உணவகங்களில் சுகாதாரமின்றி சமைக்கப்படும் உணவை வாங்கி உண்பதால் ஏற்படும் வயிற்று உபாதை பிரச்சனை இனி கிடையாது. பசிக்கு உணவின்றி வெறும் வயிற்றோடு அலைந்து பசியால் காதடைத்து மயங்கி விழ வேண்டாம். காபி டீ போன்றவற்றையே திரும்ப திரும்ப குடித்து பித்தம் தலைக்கேறி மயங்க வேண்டாம். உணவகங்களில் போய்ச் சாப்பிட காசில்லாத காரணத்தால் வெறும் வயிறாக போட்டு வயிற்றை புண்ணாக்கிக் கொள்ள வேண்டாம். வெளியூர்காரர்கள் வீட்டு சாப்பாடு போன்ற அம்மா உணவகத்தில் உண்டு மூன்று வேளையும் பசியாறலாம்.

குறைந்த வருமானம் உடையவர்கள் சாப்பாட்டுக்கு அதிகம் செலவழிக்காமல் சம்பாதிக்கும் பணத்தை மிச்சப்படுத்தலாம். இத்தனை நன்மைகளையும் கொண்ட திட்டத்தை மனிதநேய உணர்வுடன் சைதையார் இத்திட்டத்தை செயல்படுத்தினார்.

**அம்மா உணவகமாக மாற்றினார்**

சைதையார் அறிமுகம் செய்து அம்மா தொடங்கி வைத்த இத்திட்டம் மாணிக்கவாசகர் சிவபெருமானின் அன்பை ‘பால் நினைந்தூட்டும் தாயினும் சால பரிந்து’ எனப் பாராட்டியது போல பரிவோடு உணவூட்டும் திட்டம் ஆகும். இத்திட்டத்தை அறிமுகம் செய்ததும் அங்கு ஓர் இடத்தில் இருக்கிறது இங்கு ஓர் இடத்தில் இருக்கிறது என்று சொல்லாதபடி சென்னை நகரம் முழுக்க 127 இடங்களில் காணொளி மூலமாக முதல்வர் ஜெயலலிதா அம்மா உணவகத்தை திறந்து வைத்தார். சென்னை மாநகராட்சியில் உள்ள பதினைந்து மண்டலங்களிலும் 19-2-2013 அன்று பதினைந்து உணவகங்களை முதல்வர் ஜெயலலிதா திறந்து வைத்தார். முதல்வர் பிறந்த நாள் அன்று மேலும் பல அம்மா உணவகங்கள் திறக்கப்பட்டன. இத்திட்டம் எளிமையாக தொடங்கப்பட்டு பெருமையாக உருவானது. ஆரம்பத்தில் ஜெயலலிதா இந்த உணவகத்தை திறந்த போது இதற்கு மலிவு விலை உணவகம் என்று தான் பெயர் சூட்டப்பட்டது. நான்கு நாட்கள் கழித்து பச்சை நிறத்தில் அம்மா உணவகம் என்று எழுதப்பட்ட பெயர்ப் பலகைகளை சைதையார் அனைத்து

*உணவகங்களிலும் அமைத்தார். முதலமைச்சர் எம்.ஜி.ஆர். சத்துணவுத் திட்டம் போல அம்மா உணவகமும் மக்களிடையே பிரபலம் ஆயிற்று. பேரும் பிரபலமாயிற்று, திட்டமும் வரவேற்பு பெற்றது.*

### அம்மா திட்டங்களுக்கு முன்னோடியான அம்மா உணவகம்

*அம்மா உணவகத்தை தொடர்ந்து அம்மா குடிநீர், அம்மா சிமெண்ட், அம்மா உப்பு என பல திட்டங்கள் அம்மாவின் பெயரால் வந்தன. இவ்வாறு வருவதற்கு இந்த அம்மா உணவகம் என்ற பெயர் முன்னோடியாக அமைந்தது கண்டு அம்மா மிகவும் மனம் மகிழ்ந்தார். இந்த மகிழ்ச்சி சட்டமன்ற தேர்தலில் அவர் தொடர்ந்து இரண்டாவது முறையாக வெற்றி பெற்ற போது சைதையாருக்கு அளித்த முன்னுரிமையில் வெட்ட வெளிச்சமாயிற்று. தேர்தலின் வெற்றி செய்திகள் வந்து குவிந்த வண்ணம் இருந்த போது அவரை பாராட்ட ஏராளமான முக்கியஸ்தர்கள் அவர் வீட்டு முன்பு கூடியிருந்தனர். அப்போது வீட்டினுள் இருந்தபடி ஜெயலலிதா தன் பாதுகாவலரிடம் மேயர் வந்திருக்கிறாரா அவரை முதலில் வரச்சொல்லுங்கள் அவர் கையால் முதல் பூங்கொத்தை பெற்றுக் கொள்கிறேன் என்று சொல்லி அனுப்பினார். சைதையார் முதலில் வரவழைக்கப்பட்டு அவரிடமிருந்த பூங்கொத்தை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்ட முதல்வர் ஜெயலலிதா சைதையாரிடம் சில நிமிடங்கள் பேசி தன் அளவற்ற மகிழ்ச்சியை தெரிவித்தார்.*

### அதிக எண்ணிக்கையில் அம்மா உணவகங்கள்

*தமிழ்நாடெங்கும் அம்மா உணவகம் ஆரம்பிக்கப்படும் என்று அறிவித்ததும் மருத்துவமனைகளில் முதலில் திறக்க வேண்டும் என்று கோரிக்கை எழுந்தது. முதலில் சென்னையில் உள்ள ஏழு அரசு மருத்துவமனைகளில் அம்மா உணவகம் தொடங்கப்பட்டது, பின்பு வட்டத்துக்கு ஒன்று என 200 அம்மா உணவகங்கள் திறக்கப்பட்டன. மற்ற ஊர்களில் 200 அம்மா உணவகங்கள் திறக்கப்பட்டன. மொத்தம் 407 அம்மா உணவகங்கள் செயல்படுகின்றன. இந்த உணவகங்களில் யார் வந்து எவ்வளவு வேண்டும் என்றாலும் வாங்கி சாப்பிடலாம். ஆனால் பார்சல் வாங்கி செல்ல*

*அனுமதியில்லை. ஒருவருக்கு மட்டும் என்றால் தட்டில் வாங்கி செல்லலாம். பதினைந்து ரூபாயில் ஒருவர் மூன்று வேளை சாப்பாட்டையும் சாப்பிட்டு விடலாம். மாதத்துக்கு வெறும் 450 ரூபாயில் சத்தான சுவையான பூரணமான உணவை பெறலாம்.*

### *சொந்தமாக ஆட்டோ வாங்கினேன்*

*தினமும் வெளி சாப்பாடு சாப்பிட்டு வந்த ஒருவருக்கு நாள் ஒன்றுக்கு 100 முதல் 150 ரூபாய் வரை செலவாயிற்று. அவர் அம்மா உணவகத்தில் சாப்பிட ஆரம்பித்ததும் மிச்சமான பணத்தை கொண்டு மாதம் மூவாயிரம் சேமித்து சொந்தமாகப் பணம் கட்டி ஒரு ஆட்டோ வாங்கினார். அதை சைதையாரிடம் கொண்டு வந்து காட்டி அவரிடம் தன் நன்றியை தெரிவித்து ஆசி பெற்றுச் சென்றார். இன்றைக்கு ஏழை எளியோர் மட்டுமல்ல விளையாட்டு பயிற்சி பெறும் மாணவர்கள், வீட்டில் வசதி இல்லாமல் பூங்காவில் அமர்ந்து படிக்கும் மாணவர்கள், ஓய்வு பெற்ற மாலையில் நடை பயிற்சிக்கு வரும் முதியவர்கள், பூங்காவில் ஆறு மணி வரை விளையாடி மகிழும் சிறுவர்கள் கூட அம்மா உணவகத்தில் சாப்பிட்டு மகிழ்கின்றனர். இத்திட்டத்தை மேலும் விரிவாக்கினால் இன்னும் பல லட்சக்கணக்கானோர் பயன் பெறுவர்.*

### *இன்னும் என்னென்ன செய்யலாம்?*

*அம்மா உணவகத்தில் ஆதரவற்ற முதியவர்களுக்கு மூன்று வேளையும் உணவு வழங்கலாம் அதற்கான தொகையை அவர்களின் ஓய்வூதியத்திலிருந்து பிடித்துக் கொள்ளலாம். மகளிர் சுய உதவிக் குழுக்களின் தயாரிப்புகளை இங்கு வைத்து விற்கலாம். பசி போக்கும் கடலை மிட்டாய், இளைத்தவனுக்கு எள்ளு, கொளுத்தவனுக்கு கொள்ளு என்பார்களே அதன்படி இளைத்த குழந்தைகளுக்கு உடல்வளர்க்கும் எள்ளுமிட்டாய், தோப்புக்காரரிடமிருந்து நேரடியாகக் கொள்முதல் செய்யப்படும் இளநீர் போன்றவற்றை வைத்து விற்கலாம். சிலர் இப்போது இத்திட்டத்துக்கு ஒரு நாளைக்கு இருபதாயிரம் செலவாவதால் அரசுக்கு 63 கோடி நஷ்டம் என்று கூறி*

இத்திட்டத்துக்கு மூடுவிழா நடத்த திட்டமிடுகின்றனர். இதனை மாற்ற தினம் ஒருவர் என்று சில ஸ்பான்சர்களை பிடித்தால் செலவுகளை மடை மாற்றிவிடலாம். சிலர் பிறந்தநாள் திருமண நாள் போன்ற சிறப்பு தினங்களுக்கு மட்டும் ஸ்பான்சர் செய்யலாம். இவ்வாறு உதவத் துடிக்கும் உள்ளங்களை கொண்டு செலவைக் குறைக்கலாம் என்று சைதையார் கருதுகிறார்.

### நெடுஞ்சாலைகளில் அம்மா உணவகம் வருமா?

வெளியூர் செல்லும் பிரயாணிகளை பேருந்துகளின் ஓட்டுனரும் நடத்துனரும் தமக்கு விலையின்றி உணவு வழங்கக்கூடிய ஹோட்டலாக பார்த்து வண்டியை நிறுத்துகின்றனர். அங்கு அதிக விலைக்கு விற்கும் உணவு பொருட்களை வாங்கி பயணிகள் உண்கின்றனர். உணவும் சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுவதில்லை. இதனால் அம்மா உணவகங்களை நெடுஞ்சாலைகளில் திறந்தால் தொலை தூரம் செல்லும் பயணிகளுக்கு பேருதவியாக இருக்கும் என்று கோரிக்கை வைத்தனர். இதை வருங்கால திட்டமாக சைதையார் வைத்துள்ளார். அம்மா குடிநீர் பேருந்து நிலையங்களில் பயணிகள் இடையே நல்ல வரவேற்பை பெற்றுள்ளது. அது போல அம்மா உணவகமும் ஆரம்பிக்கப்பட்டால் மக்களுக்கு நல்ல ஆரோக்கியத்தையும் சேமிப்பையும் அளிக்கும். ஒரு உடனடித் திட்டத்தை நீண்ட காலத் திட்டமாக வளர்த்தெடுக்கும்போது அதன் பலனும் வீச்சும் [reach] பல்வேறு தரப்பினருக்கும் நீண்ட காலமாக கிடைக்க உதவும்.

### வெள்ளக் காலத்தில் அருந்தொண்டு

2015ஆம் ஆண்டு சென்னையில் பெரு வெள்ளம் ஏற்பட்ட போது அம்மா உணவகமே பலருக்கும் உணவு அளித்தது. அதில் பணியாற்றிய மகளிர் இருபத்தி நான்கு மணி நேரமும் சுற்று முறையில் பணி செய்து அடுப்பை அணைய விடாமல் சமைத்தபடியே இருந்தனர். பசியாலும் குளிராலும் அவதிப்பட்ட மக்களுக்கு சுகாதாரமான உணவை குறைந்த விலையில் அம்மா உணவகம் வழங்கியது. சுடச்சுட உணவு பரிமாறப்பட்ட போது குழந்தைகளும், பெரியவர்களும்

*ஆவலோடு வாங்கி சாப்பிட்டனர். வீடிழந்து பொருட்களும் தண்ணீரில் நனைந்து கிடந்த போது மூன்றுவேளை உணவுக்கு கையேந்திய நிலை பெரும் பணக்காரருக்கு கூட ஏற்பட்டது. சில நாட்கள் தண்ணீர் வடியாததால் உறவினர் வீடுகளுக்குக் கூட அவர்களால் செல்ல முடியவில்லை. அப்போது அம்மா உணவகங்களே அவர்களுக்கு நல்ல சுகாதாரமான உணவை குறைந்த விலைக்கு வழங்கின.*

***அம்மா உணவகத்தை பின்பற்றிய மற்ற மாநில அரசுகள்***

*நல்ல திட்டம் என்றால் அதை மேம்பாட்டுச் சிந்தனை உடைய நல்லவர்கள் பாராட்ட வேண்டும், மற்றவர்கள் பின்பற்ற வேண்டும். தமிழகத்தில் எம்.ஜி.ஆர். சத்துணவுத் திட்டம் ஆரம்பித்த போது அதன் உடனடி பலனையும் வரவேற்பையும் பார்த்து மற்ற மாநிலங்களும் தொடங்கின. அதைப் போல அம்மா உணவகம் ஆரம்பிக்கபட்ட போதும் மற்ற மாநிலங்கள் நேரில் வந்து பார்த்து பாராட்டிவிட்டு தமது மாநிலங்களிலும் இதைப் பின்பற்றின. அந்த வகையில் தமிழகம் பல மாநிலங்களுக்கு திட்டங்களை தீட்டி செயல்படுத்தி அதன் வெற்றியை அறிமுகம் செய்வதில் முன்னோடி மாநிலமாக இருக்கிறது. ஆந்திராவில் அண்ணா என்று மக்கள் அன்போடு அழைக்கும் என்.டி.ராமராவின் பெயரால் அண்ணா கேன்டீன் என்று மலிவு விலை உணவகம் தொடங்கப்பட்டது. அவர் தொடங்கிய தெலுங்கு தேச கட்சி ஆட்சியில் இருந்ததால் இத்திட்டம் அங்கு நல்ல முறையில் செயல்பட்டது.*

*கர்நாடகாவில் காங்கிரஸ் கட்சி ஆட்சியில் இருந்ததால் அன்னை இந்திராகாந்தி பெயரால் இத்திட்டம் தொடங்கப்பட்டது. இங்கு காலையும் மதியமும், ஐந்து ரூபாய்க்கு உணவு வழங்கினர்.*

*மத்திய பிரதேசத்தில் மாமா என்று ஆர்.எஸ்.எஸ் இயக்கத்தாரால் அழைக்கப்பட்ட தீன் தயாள் என்பவரின் நூற்றாண்டு நினைவாக ‘மாமா உணவகம்’ தொடங்கப்பட்டது. இதில் ஐந்து ரூபாய்க்கு தீன் தயாள் தாலி என்ற பெயரில் சாப்பாடு வழங்கினர்.*

*ராஜஸ்தானில் அன்னபூர்ணா ரசோயி என்ற பெயரில் மலிவு விலை உணவகம் தொடங்கப்பட்டது. அங்கு காலையில் ஐந்து ரூபாய்க்கும் மதியம் எட்டு ரூபாய்க்கும் உணவு வழங்கினர்.*

*உத்தரப் பிரதேசத்தில் அன்னபூர்ணா போஜனாலயா என்ற பெயரில் இத்திட்டம் அழைக்கப்பட்டது. இங்கு காலை உணவு மூன்று ரூபாய்க்கும் மதியம் மற்றும் இரவு உணவு ஐந்து ரூபாய்க்கும் வழங்கப்பட்டது.*

*அடுத்து ஒடிஷாவில் இத்திட்டம் ஆஹார் என்ற பெயரில் அறிமுகமாயிற்று. அங்கு ஐந்து ரூபாய்க்கு பசியை போக்க ஆகாரம் வழங்கப்பட்டது.*

*உத்தரகாண்ட் மாநிலத்தில் இந்திரா அம்மா உணவகம் என்று தொடங்கப்பட்ட இத்திட்டம் மலிவு விலையில் உணவை வழங்கியது.*

*இவ்வாறு இந்தியாவின் முக்கிய மாநிலங்களில் மலிவு விலையில் உணவு வழங்கும் திட்டம் தொடங்கி வெற்றிகரமாக செயல்பட்டு வருகிறது.*

***அமெரிக்கத் தமிழர்களுக்கு அம்மா'ஸ் கிச்சன்***

*வெளிநாட்டில் வாழும் மக்களுக்கு மலிவு விலையில் உணவு வழங்க விரும்பி அமெரிக்க தமிழர் தினேஷ் குமார் 'அம்மாஸ் கிச்சன்' என்ற பெயரில் இத்திட்டத்தைத் தொடங்கினார். அவர் அமெரிக்காவில் தமிழர்கள் அதிகமாக வாழ்கின்ற மூன்று இடங்களில் இத்திட்டத்தை தொடங்கினார். நியு ஜெர்சி, டெக்சாஸ், ஃபிலாரிடா என்ற மாநிலங்களில் வாழும் தமிழருக்காக தினேஷ் குமார் மலிவு விலை உணவுத் திட்டத்தை தொடங்கியுள்ளார். அங்கும் இத்திட்டம் பலருக்கும் பலனளித்து வருகிறது.*

***உணவு தரும் வாழ்த்து***

*மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன் படத்தில் இளவரசராக இருக்கும் எம்.ஜி.ஆர். ஒரு ஏழை முதியவரின் வீட்டில் அவர் தரும் கூழை குடித்துவிட்டு வயிறு நிறைந்தது*

என வாழ்த்துவார். அப்போது அவர் அந்த மூதாட்டியிடம் உணவின் மகிமையை எடுத்துரைப்பார். அரண்மனைச் சாப்பாடு சாப்பிட்டாலும் கூழை குடித்தாலும் சாப்பிட்ட பின்பு உண்டாகும் மன நிறைவு, திருப்தி ஒன்று தான் அம்மா என்பார். வயிறார சாப்பிட்ட பின்பு மனதார வாழ்த்துகின்ற வாழ்த்து அதிக வல்லமையும் நீண்ட ஆயுளும் உண்டு. ஏனென்றால் பொன், பொருள், இடம், புலம், என எது கொடுத்தாலும் மக்களுக்கு மனம் திருப்தி அடையாது. இன்னும் வேண்டும் என்று தான் ஆசை வரும் ஆனால் உணவு மட்டுமே ஒருவரை 'போதும்; இனி வேண்டாம்; வயிறு நிறைந்துவிட்டது' என்று சொல்லவைத்து விடும். ஆக திருப்தி என்பது உணவு உண்பதில் தான் கிடைக்கிறது. உணவு உண்டவர் மனதார வாழ்த்தும்போது அது முழுமையான வாழ்த்தாக அமைகிறது. அந்த வாழ்த்து ஏழேழு தலைமுறைக்கும் வரமாக அமைகிறது. இந்த வாழ்த்து சைதையாருக்கு ஏராளமாக கிடைத்திருக்கிறது. அவரது தலைமுறைகள் நீடூழி வாழட்டும்.

# *2. பசுமைப் பூங்கா*

*நகர்மயமாவதால் சூழல் மாசு, விபத்து, தட்ப வெப்ப மாற்றம் போன்ற விளைவுகள் ஏற்படுகின்றன. இதனால் நகரங்களில் பசுமை பூங்காவின் தேவை அதிகமாகிறது. சில இடங்களில் நலவாழ்வு நகரங்கள் [health cities] என்ற பெயரில் புதிய நகரங்களை உருவாக்குகின்றனர். மனிதன் உயிர் வாழ சுத்தமான காற்று அவசியமாகும். அந்த காற்றை நமக்கு வழங்க தயாராக இருப்பவை மரம் செடி கொடி ஆகியன. எனவே பசுமை போர்த்திய இடத்தில் இருப்பதையே நலவாழ்வு நகரங்கள் உறுதி செய்கின்றன.*

*மாநகரம் என்ற பெயரில் சென்னை காங்கிரீட் காடு போல மாறிவிட்டதால் அங்கு வசிக்கும் மக்கள் மூச்சு திணறுகின்றனர். இவர்கள் நல்ல ஆக்சிஜனைப் பெறுவதற்கு பசுமை வெளி தேவைப்பட்டது. சென்னையில் எந்த மாற்றமும் முன்னேற்றமும் கொண்டு வருவதென்றாலே அரசியல்வாதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் பெரும் தலைவலியாக இருக்கும். ஏகப்பட்ட எதிர்ப்புகள் ஸ்டேய்கள் குறுக்கிடும். எனவே, எவரும் இது போன்ற மக்கள் நலத்திட்டங்களைத் தொடவில்லை. ஆனால் சைதையார் பசுமை வெளி அமைப்பதை ஒரு சவாலாக ஏற்றார். எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சவில்லை, தயங்கவில்லை; பின்வாங்கவில்லை. தொடர்ந்து தன் திட்டங்களை செயலாக்கினார். அதற்கான நிதி அறிக்கையை தயார் செய்தார். அதிகாரிகளை முடுக்கிவிட்டார். குறுக்குச் சாலையில் ஓட்டிய அதிகாரிகளை வசக்கி நேர் வழிக்குக் கொண்டு வந்தார்.*

*மாநகர் மக்களின் நலவாழ்வுக்காக 2016ஆம் ஆண்டுக்குள் 108 கோடி ரூபாய் செலவில் 300 பூங்காக்கள்*

*உருவாக்க திட்டமிட்டார். சென்னை மாநகரம் உருவாகி தொண்ணூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இதுவரை மொத்தம் 260 பூங்காக்களே இருந்தன. இப்போது சைதையார் முயற்சியில் மேலும் முந்நூறு பசுமை பூங்காக்கள் உருவாக்கத் திட்டமிடப்பட்டன. திட்டமிடுதல் அதை அறிவித்தல் என்ற அளவில் ஏட்டளவில் செய்துவிட்டு பேரும் புகழும் பெற்ற பின்பு அதனை செயல்படுத்தாத தலைவர்கள் மத்தியில்*

**சொல்வதைச் செய்யுவோம்**

**செய்வதைச் சொல்லுவோம்**

*என்று மீனவ நண்பன் படத்தில் எம்.ஜி.ஆர். பாடியதை போன்று திட்டமிட்டதை செயல்படுத்துவதில் கண்ணும் கருத்துமாய் இருப்பவர் சைதையார். இவரது பதவிக் காலத்தில் ஐந்து வருடத்துக்குள் இந்த முந்நூறு பசுமை பூங்காக்களும் உருவாக நடவடிக்கைகள் விரைவு-படுத்தப்பட்டன. அவற்றில் 266 பூங்காக்கள் நிறைவு பெற்று மக்களின் பயன்பாட்டுக்கு வந்துவிட்டன. மற்றவை இவர் பதவிக்காலத்துக்கு பிறகு நிறைவடைந்து மக்களின் பயன்பாட்டுக்கு திறந்துவிடப்பட்டன.*

*சைதையாரின் திட்டமிடலின் கூர் மதியும் செயல்படுத்துவதில் உள்ள மின்னல் வேகமும் பெற்றவர். இவ்விரு பண்புகளும் மக்கள் நலம்; மனித நேயம் என்ற அஸ்திவாரத்தில் நிலை பெற்றன. பூங்கா என்பதை வெறும் செடிகொடிகளுடன் கூடிய இடமாக அமைக்காமல் அதன் ஒவ்வொரு பகுதியையும் மக்களுக்கு பயன்படும் வகையில் அனைத்து நன்மைகளையும் உண்டாக்கினார். இனி இதில் செய்வதற்கு என்ன இருக்கிறது? எல்லாம் தான் சைதையார் செய்துவிட்டாரே என்று வியக்கும்படி இந்த பசுமை பூங்காக்களை பன்முக நோக்கில் பயன் தரும் மையங்களாக மெருகேற்றினார்.*

*சண்டீகர் நகரத்தை போல பழைய பெங்களூரு நகரத்தை போல சென்னையையும் பூங்கா நகரமாக மாற்றி காட்ட அனைத்து முயற்சிகளும் மேற்கொண்டார். ஆனால் மேற்கூறிய நகரங்களில் இல்லாத பல மேம்பட்ட வசதிகளை*

சென்னையில் அறிமுகம் செய்தார். நகர் வாழ் மனிதர்களுக்கு அனைத்து பயன்களும் தரத்தக்க வகையில் இந்த பூங்காக்கள் தரும் பயன்களை இனி ஒவ்வொன்றாக காண்போம்.

பசுமை பூங்காவால் உடல் மற்றும் மனத்தின் செயற்பாடுகள் உற்சாகம் பெறுகின்றன. இதய நோய் கோளாறுகள், மூளை மற்றும் ரத்தக் குழாய் தொடர்பான நோய்கள், நீரிழிவு நோய், மலக்குடல் புற்று நோய், எலும்பு தேய்மானம், மன அழுத்தம் போன்றவை விரைவில் குணமாக இந்த பசுமை பூங்கா உதவுகின்றது. இது தவிர கால மன நோய் மற்றும் மன அழுத்தம் குறையவும் மனத்தின் செயற்பாடு சிறப்படையவும் உதவுகிறது.

நகரத்தை திட்டமிடுவதில் செலவு முக்கியம் ஆகும். எனவே பலர் நகரத்தின் குடியிருப்பு பகுதிகளை வடிவமைக்கும் போது சரியாக செலவு செய்வதில்லை. ஆனால் உடல் ஆரோக்கியத்தில் அதிக அக்கறை கொண்ட சைதையார் செலவை பற்றி கவலைப்படாமல் மக்களின் ஆரோக்கியத்தை பற்றிய அக்கறையுடன் பசுமை பூங்காவின் அவசியத்தை உணர்ந்து முன்பை விட அதிகமாக முந்நூறு இடங்களில் பசுமை பூங்காவை வெகு நேர்த்தியாக பன்முக பயன்பாட்டுக்கு ஏற்ற வகையில் திட்டமிட்டு அமைத்தார்.

ஒரு சிறந்த நிர்வாகியின் முக்கிய பண்புகள் தொலை நோக்கு சிந்தனையும் தெளிவான இலக்குகளும் ஆகும். நாள் ஒன்றுக்கு ஆயிரக்காணக்கானோர் வந்து போகும் சென்னையை நூற்றுக்கணக்கானோர் புதிதாகக் குடி புகும் சென்னையை நலவாழ்வு நகராக்குவதே சைதையாரின் தொலை நோக்கு சிந்தனையாக இருந்தது. தென்னிந்தியாவின் பாரம்பரியம் மிக்க நகரமான சென்னையை அனைவரும் ரசிக்கத்தக்க நகரமாக மதிக்கத்தக்க மாநகரகமாக மாற்றியமைக்கும் தொலை நோக்கு சிந்தனை அவரிடம் இருந்தது. சிந்தனையை செயல்படுத்த முனைந்த போது அவருடைய செயல்திட்டங்களில் முதலிடம் பெற்றது பசுமை பூங்காக்களின் தரத்தையும் எண்ணிக்கையையும் வசதிகளையும் அதிகரிப்பதாகும். ஏற்கெனவே இருந்த பூங்காக்கள் வெறும் பெயரளவில் மட்டுமே இருந்து வந்தன.

*அவற்றால் மக்களுக்கு யாதொரு பயனும் இல்லை. எனவே மக்கள் நலப்பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட சைதையார் ஒரு பசுமை பூங்காவில் நூறு சதவீத நன்மைகள் கிடைக்கும்படி திட்டமிட்டு நிறைவேற்றினார். அவருடைய தொலை நோக்கு சிந்தனையும் தெளிவான திட்டமிடலும் இன்று சென்னை மாநகர் மக்களுக்கு முன்பிருந்ததை விட முந்நூறு பூங்காக்களை அதிகமாக்கி உள்ளது.*

*அடுக்ககங்களும் சந்து பொந்துகளும் தெருக்களாக உருவெடுத்திருக்கும் மாநகரில் பசுமை வெளி – green space என்பதும் பொது திறந்த வெளி –public open space என்பதும் இங்கு வாழும் மக்களுக்கு இன்றியமையா தேவைகள் ஆகும். இந்த வெளியிடங்களில் இவர்கள் அதிகாலையிலும் அந்தி மாலையிலும் காலார நடக்கும்போது. இளம் சூரியனின் ஒளியும் இளங்காற்றும் இவர்களுக்கு புத்துணர்ச்சியை நல்குகிறது.*

*இந்த பூங்காக்களில் உடற்பயிற்சி, நடை பயிற்சி, யோகா போன்ற நலவாழ்வு செயற்பாடுகளுக்கு தேவையான வசதிகள் இருக்கும்போது பூவை நாடி வரும் வண்டை போல பூங்காக்களை நாடி மனிதர் வருவது இயல்பு தானே. பச்சை செடி கொடி மரங்கள் வெளியேற்றும் ஆக்சிஜனை உட்சுவாசிக்கும் மனிதர்களின் ரத்தக் குழாய்கள் விரிவடைந்து இரத்தோட்டம் வேகம் பெறும். அப்போது இரத்தக் குழாய்களில் உறைந்திருக்கும் சிறு சிறு கட்டிகளும் அடைப்புகளும் கரைந்துவிடும். இதனால் இந்த பசுமை பூங்காவில் தினமும் பயிற்சி எடுப்பவருக்கு இதயம் மற்றும் ரத்தக் குழாய் போன்ற நோய்கள் அண்டாது. அதிக வருமானமுள்ள நாடுகள் தம் மக்களின் ஆரோக்கிய வாழ்வுக்குச் செலவு செய்ய தயங்குவதில்லை. ஆனால் இந்தியா போன்ற நாடுகளில் நகரங்களில் புறாக்கூண்டு வீடுகளுக்கும் மூச்சு திணறிச் சிக்கி தவிக்கும் மக்களுக்கு ஆரோக்கிய பசுமை வெளியை ஏற்படுத்தி தருவது கட்டாயம் என்பது எவருக்கும் இதுவரை தோன்றவில்லை. ஆனால் ஆரோக்கியத்தின் அடிப்படைகளை நன்குணர்ந்த மாநகர்*

*தந்தை சைதையார் தன் மக்களுக்கு நலவாழ்வு அமைத்து தர பசுமை பூங்காக்களை உருவாக்கினார்.*

*பூங்காக்கள் என்றாலே அங்கு நல்லவர்கள் வர இயலாது, சமூக விரோதிகள் கூடும் இடமாக இருக்கும், இளங்காதலர்கள் அங்கு புகலிடம் தேடி வருவர், யாருமில்லாத அனாதைகள், வேலை வெட்டி இல்லாதோர் அங்கு வந்து சிமெண்ட் பெஞ்சுகளில் படுத்திருப்பர், பாதுகாப்பற்ற ஆபத்தான இடம் என்று பலரும் வெறுத்து பேசிய வேளையில் பசுமை பூங்காக்களை நல்வாழ்வுத் தலங்கள் [health centres] என்று நம்ப வைத்தவர் சைதையார். அந்த நம்பிக்கைக்குரிய பல நல்ல திட்டங்களை மேனாட்டு பாணியில் அமைத்து மக்களின் ஏகோபித்த வரவேற்பை பெற்றார்.*

*மாநகராட்சி பூங்காக்கள் திறப்பு விழாவின் போது பல்வேறு விளையாட்டு உபகரணங்கள், ரேடியோ அல்லது டிவி பெட்டி, ஒளிவீசும் குழல் விளக்குகள், விசித்திரமான பொம்மை உருவங்கள், மான், கரடி, ஒட்டகம் போன்ற விலங்குகளின் சிற்பங்கள், சிறிய ரயில் போன்ற வசதிகளுடன் காணப்படும். ஆனால் ஒரு வாரம் கழித்து போய் பார்த்தால் விளையாட்டு உபகரணங்கள் உடைந்தும் தொலைந்தும் போயிருக்கும். சறுக்கின் படிக்கட்டுகள் உடைந்திருக்கும். ரேடியோ, டி.வி. சத்தம் கேட்காது. சிற்பங்கள் சிதைக்கப்பட்டிருக்கும். மனித நடமாட்டமே இருக்காது. வாயில் கதவில் பெரிய பூட்டு தொங்கும். சிறுவர்கள் வெளியே நின்றபடி ஏக்கத்தோடு பார்த்துக்கொண்டிருப்பர். இந்த நிலை சைதையார் ஆரம்பித்து வைத்த பூங்காக்களுக்கு ஏற்படக் கூடாது என்பதால் அவர் நவீன முறையில் இயங்கும் பல திட்டங்களை அங்கு அறிமுகம் செய்தார். மேனாட்டு பாணியில் பல நலவாழ்வு திட்டங்களை இந்த பசுமை பூங்கா திட்டத்தில் இணைத்தார்.*

*பசுமை பூங்காக்களில் தினமும் திருக்குறள் ஒலிக்க வகை செய்தார். நாம் விரும்பியோ விரும்பாமலோ நம் காதுகளில் நல்ல கருத்து கேட்கும். நம் மூளை அதை பதிய வைத்து கொள்ளும். சில வேளைகளில் நம் அன்றாட*

பிரச்சனைக்கு திருக்குறள் தீர்வு கூறும். நண்பனின் துரோகச் செயலை நினைத்து பெருமூச்சு விட்ட படி அவனை பழி வாங்க வேண்டும் என்று சிந்தித்து கொண்டிருந்த ஒருவரின் காதில் 'அவர் நாண நன்னயம் செய்து விடல்' என்ற குறள் வரி கேட்டதும் அவரது மன அழுத்தம் மறைந்து விட்டது. ''போகட்டும் அவனை மன்னித்து விடுவோம். அவன் நம் நண்பன் தானே: ஏதோ தெரியாமல் செய்துவிட்டான்; நாம் அவனுக்கு தீங்கு நினைக்க கூடாது; அவனுக்கு நன்மையே செய்ய வேண்டும்'' என்ற எண்ணம் உதித்தது. இவ்வாறு பல நல்ல விளைவுகள் நடக்க ஏதுவாக இந்த திருக்குறள் ஒலிக்கும் திட்டம் அமைந்தது. 'நல்லாரை காண்பதுவும் நன்றே; நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே' என்ற ஆன்றோர் வாக்கினை அறிந்த சைதையார் திருக்குறள் ஒலிக்கும் திட்டத்தை தொடங்கினார். பூங்காவுக்கு வந்த மக்களும் நல்லார் சொல் கேட்க தொடங்கினர்.

பூங்காவின் சுத்தம் என்பது கழிவுகளை அப்புறப்படுத்துவதில் இருக்கிறது. தூய்மை பணிகளை செய்ய கடமையுணர்வுடைய பணியாளர் நியமிக்கப்பட்டனர். மக்கள் பயன்படுத்த நல்ல கழிப்பறைகளும் அங்கு இருந்தன. தினமும் நடை பயிற்சி மேற்கொள்வோர் அக்குபிரஷர் முறையில் பயன் பெற அவர்களின் நரம்புகள் முடியும் கால் பகுதியில் அழுத்தம் ஏற்படுத்தி அனைத்து நரம்புகளுக்கும் புத்துணர்ச்சி அளிக்க கூழாங்கல் போட்ட நடை பாதை ஒன்று சிறப்பாக அமைக்கப்பட்டது. எத்தனை மீட்டர் தூரம் நடந்திருக்கிறோம், இன்னும் எத்தனை மீட்டர் நடக்க வேண்டும் என்பதை அறிந்துகொள்ள வசதியாக ஆங்காங்கே தொலைவை குறிக்கும் அறிவிப்புகள் இடம்பெற்றன. எத்தனை நிமிடங்கள் நடந்திருக்கிறோம்? என்ன வேகத்தில் நடக்கிறோம்? இன்னும் எத்தனை நிமிடங்கள் நடக்க வேண்டும்? என்பதைத் தெரிந்துகொண்டு 'செய்வன திருந்த செய்' என்ற முறையில் நடை பயிற்சி மற்றும் உடற்பயிற்சி மேற்கொள்ள கடிகாரங்கள் வைக்கப்பட்டன. ஏதோ டாக்டர் நடக்க சொன்னார், நடக்கிறோம் என்றில்லாமல் முறையாக நடைப் பயிற்சி மேற்கொள்ள சைதையார் நுணுகி ஆராய்ந்து ஒவ்வொரு வசதியையும் மக்களுக்கு செய்து கொடுத்தார். இவை தவிர பூங்காக்களில் இன்னிசை கேட்கும்படியான

ஏற்பாடுகளையும் சைதையார் மக்களுக்கு செய்து கொடுத்தார். இசையின் பயனை ஓரிரு வரிகளிலோ பத்திகளிலோ சொல்லிவிட முடியாது. அதன் நன்மைகள் ஏராளமானவை அதை இனி விரிவாகக் காண்போம்.

**இசையாய் இசைப்பயனாய் இருப்பவன் இறைவன்**

சிவனை வழிபடும்போது ஏழிசையாய் இசைப்பயனாய் இருப்பவனே என்று திருத்தொண்டர் பாடுகிறார். இசை இறைவனுக்கு சமமானது. இசையின் பயனும் இறைவனுக்கு நிகரானது. ஏனென்றால் இசை இறைவன் அருளும் அனைத்து நலங்களையும் அருள வல்லது. மனக் கவலைகளை குறைத்து மனதில் மகிழ்ச்சியை அருள்வது இறை அருளும், இசையும் மட்டுமே என்பதை விரிவாக அறிவோம்.

பசுமை பூங்காவுக்கு வருவோர் நல்ல காற்றை சுவாசித்தபடி, இதமான சூழ்நிலையில் இருந்துகொண்டு அங்கு ஒலிக்கப்படும் இனிமையான இசையை கேட்கும்போது அவர்களின் மூளையில் டோபமின் சுரக்கும். அப்போது அவர்கள் மனத்தில் தானாக மகிழ்ச்சியும் புத்துணர்ச்சியும் பொங்கும். காலையிலும் மாலையிலும் பசுமை பூங்காவில் இசையை கேட்டபடி நடைப் பயிற்சி அல்லது ஓட்டப் பயிற்சி மேற்கொள்வோர் அதன் பிறகு விரைவாக செயல்படுவர். நடையில் அலுப்பு தோன்றாமல் இருக்க இந்த இன்னிசை இவர்களுக்கு உதவும். பூங்காவை விட்டு வெளியே செல்லும்போது அவர்களின் நடையில் ஓட்டமும் துள்ளலும் இருப்பதை காணலாம்.

மன வேதனைக்கு காரணமான கார்டிசால் என்ற ஹார்மோனின் அளவை குறைக்கும் ஆற்றல் இன்னிசைக்கு உண்டு. பசுமை வெளியில் அமர்ந்தவாறு அல்லது மென்னடை நடந்தபடி இன்னிசையை கேட்டால் நெஞ்சை அழுத்திய மன பாரம் குறைந்து மனம் லேசாகிவிடும். நீண்டகாலமாக மன அழுத்த நோய்க்கு ஆளானவர்களைத் தினமும் சிறிது நேரம் பசுமை பூங்காவில் உலவ விட்டால் அவர்கள் பழைய நிலைக்கு விரைவில் திரும்புவர். உடம்பில் வரக்கூடிய அறுபது சதவீத நோய்களுக்கு மன அழுத்தமே

காரணம் என்பது மருத்துவர்களின் ஆராய்ச்சி முடிவாகும். அன்றன்றைக்கு மனதில் உள்ள துயரங்களை அழித்துவிட்டால் நோயின்றி சுக வாழ்வு வாழலாம். இந்த மாநகரத்தில் இட நெருக்கடி மட்டுமல்ல, மன நெருக்கடியும் உண்டு. இந்த இரு நெருக்கடிக்கும் பசுமை பூங்காவும் அங்கு இசைக்கப்படும் இன்னிசையும் தக்கதொரு தீர்வாக அமையும் என்பதால் சைதையார் இன்னிசை ஒலிக்கும் திட்டத்தையும் சேர்த்தே அறிமுகம் செய்தார்.

பசுமை பூங்காவில் இசைக்கப்படும் இசை உடல் மற்றும் மன நோய்களை விடுவிப்பதோடு மற்றொரு நன்மையையும் அளிக்கிறது. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்ற முன்னோர் வாக்கின்படி பூங்காவின் இசை மக்களுக்கு நோயில்லா சுக வாழ்வை தருகிறது. அமைதியாக ரசிக்கப்படும் [passive listening] இசை உடம்பில் நோய் எதிர்ப்பு சக்தியை வளர்க்கும் என்று மேனாட்டில் கண்டுபிடித்துள்ளனர். தொனதொனவென்று பேசி கொண்டிராமல் இசையை அமைதியாக கேட்டபடி சிறிது நேரம் பூங்காவில் அமர்ந்திருந்தாலும் நடந்து கொண்டிருந்தாலும் அவருக்கு நோய் எதிர்ப்பு சக்தி பெருகும்.

அமெரிக்காவில் முப்பது சதவீதம் பேர் இரவில் தூக்கம் இல்லாமல் தவித்தனர். இவர்களுக்கு நல்ல தூக்கம் வருவதற்காக நடத்திய ஆய்வில் தூங்குவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு கேட்கப்படும் அமைதியான மெல்லிசை அவர்களுக்கு நல்ல உறக்கத்தை கொடுத்தது. சென்னை மாநகர் மக்கள் தம் நெருக்கடியான வாழ்க்கையினால் இரவில் உறக்கமின்றி தவித்து காலையில் தாமதமாக எழுந்து வேகவேகமாக அலுவலகத்துக்கு ஓடி அங்கும் தூக்கக் கலக்கத்தில் சரியாக வேலை செய்யாமல் அதிகாரியிடம் திட்டு வாங்கி மன அழுத்தத்துக்கு உள்ளாகி சோர்ந்து போய் வீட்டுக்கு திரும்பி வந்து மீண்டும் உறங்காமல் அலுவலகத்தில் திட்டு வாங்கியதையே நினைத்து கலங்கிக் கொண்டிருப்பது சகஜம். அந்த நிலைமை நீடிக்காமல் இரவில் நன்கு தூங்கவும் பகலில் உற்சாகமாக பணிபுரியவும் சைதையார் பசுமை பூங்காவை ஏற்படுத்தி அங்கு திருக்குறளும் இன்னிசையும் ஒலிக்கச் செய்தார்.

ஆர்ப்பாட்டமில்லாத மெல்லிய இசையைக் கேட்கும்போது நம் உடலில் நோரிபைன்ஃப்ரைன் என்ற ஹார்மோன் சுரப்பதால் மனம் லேசாகி காற்றில் மிதப்பது போல ஓர் உணர்வை தரும். இந்த மிதப்பு நமக்கு நல்ல ஆரோக்கியமான மனநிலையை உருவாக்கும். இந்த மனநிலை உருவாகி விட்டால் எந்த வேலையும் நமக்கு சிரமமாக தெரியாது. மனதில் சோர்வு உண்டாகாது. உலகில் இரவில் தூங்காமல் தவிப்போரில் 90%பேர் மனச்சோர்வால் அவதிப்படுகின்றனர். அந்த அவதி பசுமை பூங்காவுக்கு வரும் சென்னை வாழ் மக்களுக்கு இனி கிடையாது. வீட்டுக்கு அருகில் உள்ள பசுமை பூங்காவில் சற்று நேரம் காலார நடந்துவிட்டு வந்து படுத்தால் தூக்கம் கண்களைத் தழுவிக்கொள்ளும்.

பசுமை பூங்காவில் திருக்குறளையும் இன்னிசையையும் கேட்கும் பழக்கம் உள்ளவர்கள் அளவான உணவுப்பழக்கம் உள்ளவர்களாக மாறுவார்கள். ஆசைக்கு உண்ணாமல் ஆரோக்கியத்துக்காக உண்பார்கள். உடல் அளவாக உணவை எடுத்துக்கொள்ளும். திருவள்ளுவரும் இதனை தந்நூலில், ‘அளவறிந்து உண்க’ என்றார்.

இசை கேட்டபடியே நடப்பதும் உலாவுவதும் மக்களின் நினைவாற்றலை வளர்க்கும். இசைக்கும் மூளையின் செயற்பாட்டும் நேரடி தொடர்பிருப்பதை முன்னர் கண்டோம். இசை மூளையின் சுரப்புகளை முறைப்படுத்துவதால் இசை கேட்கும் முதியவர்களுக்கு மறதி நோய் வராது. இன்றைக்கு நடுவயதினர் கூட இந்த மறதி நோயால் அவதிப்படுவதை காண்கிறோம். தினமும் இசையை ரசித்தபடி கூழாங்கல் பாதையில செருப்பில்லாமல் வெறும் காலோடு நடந்து வந்தால் கால் பாதங்களில் அனைத்து நரம்புகளும் முடியும் இடத்தில் அழுத்தம் தரப்பட்டும் நரம்புகளின் செயற்பாடு தூண்டிவிடப்படும். தலை முதல் கால் வரை புத்துணர்ச்சி உண்டாகும். காதில் கேட்கும் இசை நினைவு செல்களை தூண்டிவிட்டு மறதி நோய் வராமல் தடுக்கும்.

இசை மூளைக்கு நல்ல பயிற்சியாக இருப்பதை தெளிவாக அறிந்தோம். தாத்தா பாட்டிமார், சிறு

குழந்தைகளை அழைத்துக்கொண்டு வந்து இந்த பசுமை பூங்காவில் விளையாட விட்டால் அவர்கள் காதில் கேட்டு வரும் இசை அவர்களுக்கு நல்ல சொல்லாற்றலை தரும். மூளையில் உதிக்கும் எண்ணங்களை வார்த்தைகளாக வெளிப்படுத்தும் கருத்து வெளிப்பாட்டுக் கலையில் நல்ல தேர்ச்சி பெறுவர். இசைக் கேட்டு வளரும் குழந்தைகள் சரியான சொற்களை அளவாகவும் அழகாகவும் பேசுவார்கள். சொல்லின் செல்வர்கள் என போற்றப்படுவர். இவர்கள் பேசும்போது தடுமாற்றமோ தயக்கமோ இருக்காது. மறதியும் வராது. இத்துணை நன்மைகள் இருப்பதால் மாநகர் முழுக்க சைதையார் புதிதாக முந்நூறு பசுமை பூங்காக்களை உருவாக்கினார். மக்கள் நலவாழ்வு வாழ வழி வகுத்தார்.

# *3. மூலிகை பூங்கா*

*சென்னை முழுக்க பசுமை பூங்காக்களை அனைத்து வசதிகளுடன் ஏற்படுத்திய பிறகு மூலிகை பூங்கா என இது எதற்கு? என்ற வினா தோன்றலாம். பசுமை பூங்காவில் பொதுவான மரம் செடி கொடிகள் எனப் பலவும் நடப்பட்டிருக்கும். ஆனால் மூலிகை பூங்காவில் மருத்துவப்பண்புடைய மூலிகைகளுக்கு மட்டுமே இடம் உண்டு. இது ஒரு மருத்துவசாலைக்கு நிகரானது. ஏன் மருத்துவமனை என்று சொல்லாமல் மருத்துவ சாலை என்று குறிப்பிடுகிறோம்? மருத்துவச் செடிகளின் மணத்தை நுகர்ந்தபடியே அங்கு நடந்து வரலாம். உட்கார்ந்து மருத்துவ காற்றை அனுபவிக்கலாம் இதனால் நோய் வராமல் தடுக்க முடியும் வந்த நோயும் விலகிவிடும். எனவே மருத்துவப் பண்புகள் நிறைந்த இடம் என்ற பொருளில் மருத்துவ சாலை அல்லது நலவாழ்வு சாலை என்கிறேன்.*

*எம்.ஜி.ஆர். அவர்கள் அமெரிக்காவிற்கு போய் சிகிச்சை பெற்று வந்த பின்பு அவரை சந்திக்க வந்த விஜயா, வாகினி நிறுவனத்தின் படத்தயாரிப்பாளரிடம் நீங்கள் ஒரு மருத்துவமனை கட்டுங்கள் எனக்கு அங்கு கிடைத்த மருத்துவ வசதிகள் இங்கும் மக்களுக்கு கிடைக்க செய்யுங்கள் அது ஒரு மருத்துவ மனை போல இல்லாமல் ஒரு ஹெல்த் சென்டர் போல கட்டுங்கள் என்றார். இவ்வாறாகத்தான் விஜயா ஹெல்த் சென்ட்டர் உருவானது. இது போல சைதையாரும் வரும் முன் காப்போம் என்றக் கொள்கைப்படி ஒரு ஹெல்த் சென்ட்டராக மூலிகை தோட்டங்களை சென்னை முழுக்க அமைத்தார். இந்த தோட்டங்கள் நோய் வந்த பின் சிகிச்சை பெறும் மருத்துவ மனைகளுக்கு நிகரானவை என்பதை விட ஒரு படி மேலாக போய் எம்.ஜி.ஆர். ஆசைப்பட்டது போல*

நலவாழ்வு மனை [ஹெல்த் சென்டர்] போன்றது. ஒரு கட்டிடமாக ஒரு வளாகத்துக்குள் இருந்தால் மனை என்று அழைக்கலாம் ஆனால் மூலிகை பூங்கா பரந்த வெளியில் இருப்பதால் மருத்துவ சாலை அல்லது நலவாழ்வுச் சாலை என்று அழைப்பது சாலப் பொருந்தும்.

பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆர். அவர்களின் ஆசைக் கனவை மூலிகை பூங்கா மூலமாக நிறைவேற்றியவர் அவரது அணுக்க தொண்டரான மனித நேய செம்மல் சைதையார் ஆவார்.

மூலிகை பூங்காவில் கண்ணுக்கு இனிய வண்ண வண்ண இலைகளை கொண்ட செடிகள் மனதுக்கு இனிமை தரும் நறுமணம் பரப்பும் மூலிகைகள், வாடாத வண்ணமலர் கொடிகள், பசுமை புல்வெளி போன்றவை இருக்கின்றன. சுற்றுப்புறச் சூழலை தூய்மையாக்கும் தாவரங்கள் இடம்பெற்றன. இந்த செடி கொடிகளின் பெயர்களும் அவற்றில் எழுதி வைக்கப்பட்டன.

துளசி, திருநீற்று பச்சிலை, கற்பூரவல்லி, செம்பருத்தி, நந்தியாவட்டம், வெள்ளை மற்றும் நீல சங்கு பூ, இளஞ்சிவப்பு மற்றும் மஞ்சள் அரளி வகைகள், வெள்ளை மற்றும் இளஞ்சிவப்பு அலரி வகைகள், சரக் கொன்றை, நொசி, தும்பை தூதுவளை, வல்லாரை, நிலவேம்பு, மல்லிகை, சந்தனமல்லி போன்றவை நடப்பட்டன. அவற்றை சுற்றி நடைபாதைகளும் அமைக்கப்பட்டன. இந்த மூலிகைக் காற்றை தினமும் ஒரு மணி நேரம் சுவாசிப்பவருக்கு நோய் எதிர்ப்பு சக்தி பெருகும்.

திருக்கோயில்களில் ஸ்தல விருட்சங்கள் என்ற பெயரில் அரிய அற்புதமான மரங்கள் காணப்படும். இவை குறித்து ஆராய்ந்த சுந்தர சோபித ராஜ் என்ற தமிழறிஞர் இம்மரங்கள் மருத்துவ பண்புடையவை என்பதையும் திருக்கோயிலுக்கு வரும் பக்தர்கள் மரத்தினடியில் அமர்ந்து செல்லும்போது அந்த மரத்தின் காற்று அவர்களுக்கு நல்ல உடல் நலனையும் மன மகிழ்ச்சியையும் அளிக்கிறது என்பதையும் கண்டறிந்தார். இந்த பாரம்பரியக் கருத்தின்படி மூலிகை பூங்காக்களில் உள்ள செடி கொடிகளும் அங்கு வந்து

*போவாருக்கு எவ்வித கட்டணமும் இன்றி நோயை விரட்டுகின்றன.*

*தமிழ் நாட்டில் பல கோயில்களில் வன்னி மரமும் மருத மரமும் ஸ்தல விருட்சங்களாக இருக்கின்றன. மருத மரத்து காற்று ரத்த ஓட்டத்தை விரைவு படுத்துவதால் இரத்தக் குழாய்களில் இருக்கும் அடைப்பு நீங்கிவிடும் இதனால் மாரடைப்பு போன்ற இதய நோய்கள் வராது.*

*வயிற்று நோய்களையும் கருப்பப்பை கோளாறுகளையும் போக்கும் செம்பருத்தி செடி மூலிகை தோட்டத்திற்கு அழகும் மக்களுக்கு ஆரோக்கியமும் சேர்த்தது.*

*தலைவலி, கட்டி மறு போன்றவற்றுக்கு அரு மருந்தான திரு நீற்று பச்சிலை, கண் சூட்டையும் கண் வலியையும் குணப்படுத்தும் நந்தியாவட்டம், சளி தொந்தரவை அகற்றும் தூதுவளை, கற்பூர வல்லி, பெண்களுக்குரிய நோய்களுக்கு மருந்தாகும் சங்கு புஷ்பம், சக்கரை நோய் தீர்க்கும் நிலவேம்பு, விஷக்கடிக்கு உதவும் சரக்கொன்றை போன்றவை மூலிகை தோட்டத்தில் இருந்தன.*

*உணவு முறை மூலமாக உடல் ஆரோக்கியத்துக்கு வழி கண்ட சைதையார் தன்னை போல் பிறரையும் நேசி என்ற இயேசு கிறிஸ்துவின் அருள் மொழிப்படி மற்றவர்களும் தன்னைப் போல ஆரோக்கியத்துடன் வாழவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த மூலிகைப் பூங்காக்களை தொடங்கினார். சக மனிதனைத் தன்னைப் போல நேசிக்கும் இவரது மனிதநேயச் செயற்பாடுகளில் முக்கியமானது என்ன வென்றால் மக்களுக்கு நல்லது என்று தெரிந்த உடனே அதை நிறைவேற்ற துடிக்கும் வேகமும் அதை செயல்படுத்தி காட்டும் விவேகமும் ஆகும்.*

*'நான் செல்லுகின்ற பாதை – பேரறிஞர் காட்டும் பாதை' என்று எம்.ஜி.ஆர். பாடியதை மெய்ப்பிக்கும் வகையில் சைதையார் செல்லும் பாதை மற்றவர்கள் தன்னைப் பின்தொடர வைக்கும் பேரறிவு பாதை ஆகும். சைதையாரின் அலுவலகத்தில் அவரை சந்திக்க வருபவர்களுக்கு எந்நேரமும் மூலிகை நன்னீர் [herbal health drink] வழங்கி உபசரிப்பது*

வழக்கம். மூலிகையின் அரும்பயன்களை தன் வாழ்வில் உணர்ந்த சைதையார் மற்றவருக்கும் அந்நன்மைகள் கிடைக்க வேண்டும் என்ற மனித நேய கொள்கையுடன் மூலிகை தோட்டங்களை உருவாக்கினார்.

முதலில் சோதனை முயற்சியாக மூன்று தோட்டங்கள் உருவாக்கப்பட்டன. மக்கள் நல்லவர்களை என்றும் கைவிடுவதில்லை. மக்கள் திலகமான எம்.ஜி.ஆரை அவர் ஆயுள் முழுக்க முதல்வராக்கி மரியாதை செலுத்தியவர்கள் அல்லவா? அதுபோல அவர் வழி வந்த சைதையார் அமைத்த மூலிகை தோட்டத்தின் நன்மைகள் விரைந்து மக்களிடம் போய்ச் சேர்ந்தன. மக்கள் பெரு வரவேற்பு அளித்தனர். திருக்கோயிலில் உள்ள நந்தவனங்கள் இறைவனுக்கு பூசைக்கு தேவையான பூக்களை கொடுப்பதற்கு மட்டுமல்ல. அங்கு வரும் தொண்டர்களுக்கு ஆரோக்கியத்தை கொடுப்பதற்கும் இரட்டை நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டன. அது போல சென்னை என்ற கோயிலுக்கு இந்த பசுமை பூங்காக்களும் மூலிகை பூங்காக்களும் நந்தவனங்களாக இருந்து நன்மை அளிக்கின்றன.

இந்தியாவின் எழில்மிகு நகரமான சண்டீகரில் நகர் முழுக்க பூங்காக்களும் அங்கு ஆரோக்கியம் ததும்பும் மக்களும் ஓடி விளையாடும் சிறுவர்களுமாக பார்க்கவே மகிழ்ச்சியாக இருக்கும். அங்கு காலை மாலை நேரங்களில் சிறிய பாய்களை தரையில் விரித்து மக்கள் யோகாப் பயிற்சி செய்து கொண்டிருப்பார்கள். தூய்மையான சூழ்நிலையும் நல்ல காற்றோட்டமான இடமும் அவர்களின் யோகப் பயிற்சிக்கு தேனோடு கலந்த தெள்ளமுதாக இனிக்கும். அதுபோல சைதையாரும் மக்கள் பூங்காவுக்கு வந்து யோகாப் பயிற்சி செய்து நலமாக வாழ விரும்பி அதற்கான வசதிகளையும் ஏற்படுத்தினார்.

புறாக்கூண்டு போன்ற வீடுகளிலும் அடுக்கு மாடி குடியிருப்புகளிலும், வரிசை வீடுகளிலும் வாழ்கின்ற சென்னை மக்களுக்கு தெருவுக்கு வந்தால் மட்டுமே கை காலை நன்றாக நீட்ட முடியும் என்கின்ற அளவுக்கு இட நெருக்கடி உண்டு. அவர்கள் குறிப்பாக வயதானவர்கள் தம்

*வீட்டில் இருந்துகொண்டு யோகாப் பயிற்சி செய்வது கடினமாக இருப்பதனால் பூங்காவுக்கு வந்துவிடுகின்றனர். அங்கு அவர்கள் யோகாப்பயிற்சிச் செய்ய வசதியாக மேடைகள் அமைக்கப்பட்டைருந்தன. இந்த யோகாப் பயிற்சி மேடைகளில் தினமும் பலர் வந்து பயிற்சி செய்து வருகின்றனர். தூய்மையான சூழ்நிலை அவர்களின் மூச்சு பயிற்சிக்கு பேருதவியாய் உள்ளது. தாயின் மீது பற்றும் பாசமும் கொண்ட எம்.ஜி.ஆர். பெண் குலத்தையே தாய் குலம் என போற்றி மதித்தார். அது போல சைதையார் அவர்களும் தாய் குலத்தின் மீது அன்பும் அக்கறையும் கொண்டவர் என்பதால் வயதான பெண்கள் எவ்வித தயக்கமும் இன்றி யோகாப் பயிற்சி மேற்கொள்ள ஏதுவாக இந்த மேடைகளை அமைத்து தந்தார். மண்ணிலும் தரையிலும் இருந்துகொண்டு யோகாப் பயிற்சி செய்வது சுகாதாரமானதாக இராது; வயதானவர்களுக்கும் இயலாது; என்ற கருத்துடன் சைதையார் மேடை அமைத்துத் தரும் திட்டத்தை செயல்படுத்தினார்.*

***சாலைகளில் பசுமையாக்கம்***

> ***எங்கெங்கு காணினும் சக்தியடா –***
>
> ***ஏழு கடல் அவள் வண்ணமடா***

*என்றார் பாவேந்தன் பாரதிதாசன். அதுபோல சைதையாரும்*

> ***எங்கெங்கு காணினும் பசுமையடா –***
>
> ***இனிமையும் குளுமையும் எண்ணமடா***

*என்ற நோக்கில் கண்ணில் காணும் இடம் யாவும் பசுமையாக காட்சி அளித்தால் சாலைகளில் போவோர் மனம் குளுமை அடையும், உற்சாகம் உண்டாகும். ஆக்கப்பூர்வமான அதிர்வுகள் [positive vibrations] தோன்றும் என்று நினைத்தார். நினைத்ததைச் சரியாக திட்டமிட்டு முடித்தார்.*

*பசுமை பூங்கா, மூலிகை பூங்கா என்று பல பூங்காக்கள் இருந்தாலும் அவை தம்மை நாடி செல்வோருக்கு மட்டுமே நன்மை தர வல்லன. ஆனால் சாலை என்பது அதன் வழியாக செல்லும் அனைவருக்கும் நன்மை அளிக்கும் விதமாக*

*அந்தந்த பகுதிகளில் பசுமையான காட்சிகளை சைதையார் கொண்டு வந்தார்.*

*போக்குவரத்து தீவு திடல்கள் பசுமை பெற்றன. நகரைச் சுற்றி வரும் போது நாம் சென்னையில் இருக்கிறோமா அல்லது சண்டீகரில் இருக்கிறோமா என்று வியக்க வைத்தது. சாலை சந்திப்புகளில் வாகன ஓட்டுனர்கள் மன அமைதியாகவும் சலனமற்றும் இருந்ததால் அவர்கள் கவனமாக வண்டி ஓட்டினர். இதனால் விபத்துகள் தடுக்கப்பட்டன.*

***சாலை சந்திப்புகளில் பசுமை***

*சலைகளில் ரவுன்டானாக்களிலும், சந்திப்புகளிலும் வண்டிகள் அத்து மீறி உள்ளே பாய்ந்து விடாமல் இருக்க எஃகினாலான கம்பி தடுப்புகள் அமைக்கப்பட்டன. பின்பு உள்ளே அழகான ஓடுகள் பதிக்கப்பட்டன. அழகான வண்ண மலர்ச் செடிகள் நட்டு வளர்க்கப்பட்டன. சிலவற்றில் இருக்கும் இட வசதிக்கேற்ப செயற்கை நீரூற்றுக்களும் அமைக்கப்பட்டன. சாலைகளின் நடுவில் [divider] இருக்கும் இடங்களிலும் இது போன்ற தடுப்புகளும் பூச் செடிகளும் அமைக்கப்பட்டு அழகுபடுத்தப்பட்டன. இப்போது மாநகரம் பசுமையாக்கப் பணிகளால் அழகும் அமைதியும் பெற்றது. இந்த திட்டப் பணிகள் முடிவுற்றதும் பசுமையாக்கப் பணிகள் நிறைவடைந்ததாக கருதலாமா என்றால் சைதையார் மனம் ஒப்பவில்லை. ஒன்றின் முடிவில் மற்றொன்றின் ஆரம்பம் உள்ளதல்லவா? ஒரு புதிய திட்டம் தொடங்கப்பட்டு அதன் பணிகள் முடிவடையும் போது மற்றொரு திட்டத்தின் தொடக்கமாக அது இருப்பது இயல்பு. அப்படி இந்த சாலை பசுமையாக்க திட்டத்தின் தொடர்ச்சியாக மக்கள் பசுமையாக்கப் பணி திட்டம் உருவானது.*

***மக்கள் இயக்கமாக மாறிய பசுமை இயக்கம்***

*பசுமையாக்க பணிகளின் முழுப் பொறுப்பையும் ஏற்று காலம் காலமாக இந்தப் பணிகளை மாநகராட்சியே செய்துகொண்டு இருக்க இயலாது. எனவே, இதில் மக்களையும் இணைத்துக் கொண்டால் இது புதிய மக்கள் இயக்கமாக மாறிவிடும். பின்பு மக்கள் முழு ஈடுபாட்டோடு*

*மாநகரின் பசுமையாக்கப் பணிகளில் தொடந்து ஈடுபடுவர் என்று சைதையார் கருதினார். அவரது தொலை நோக்குச் சிந்தனையும் செயல்திறனும் அவரை ஒரு திறன்மிகு பயன்மிகு [top talented and effective leader] தலைவர் ஆக்கியது.*

*ஒரு நல்ல மக்கள் திட்டத்தை தொடங்குவதை விட கடினம் அதை தொடர்ந்து செயல்படுத்துவதும் அதற்கு மக்களின் தொடர் வரவேற்பைப் பெற்றுத் தருவதும் ஆகும் என்பதை நன்குணர்ந்த சைதையார் மாநகராட்சி பணி என்ற அளவில் இந்த பசுமையாக்கப் பணிகள் நின்று விடாமல் இதை மக்கள் பணியாக பசுமை இயக்கமாக வளர்க்க முனைந்தார். இந்த புதுமையும் வளர்ச்சியும் அவருக்கும் மக்களுக்கும் இடையிலான பரஸ்பர நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்ததாகும். ஒரு நல்ல தலைவர் என்பவர் தன்னை பின்பற்றும்படி தன் தொண்டர்களிடம் வலியுறுத்த மாட்டார். தனது சீர்திருத்தப் பணிகளின் பயணத்தில் அவர்களையும் இணைத்துச் செல்வார் என்பது மேனாட்டறிஞர் சார்லஸ் லாவரின் கருத்து. சைதையார் தனது பசுமையாக்கப் பணிகளில் மாநகர் மக்களையும் மாணவர்களையும் இணைத்துக் கொண்டு பயணித்தார்.*

### ***மாற்றத்துக்கு வித்தாகும் மாணவர்கள்***

*மகாத்மா காந்தி அவர்கள் உலகத்தில் அமைதி பெருக வேண்டும் என்று நாம் விரும்பினால் அதை குழந்தைகளிடம் இருந்து தொடங்க வேண்டும் என்றார். அமைதிக்கான வண்ணம் பசுமை. பசுமையாக்கத்தின் முக்கிய குறிக்கோள் அழகு அல்ல அமைதி. எனவே பசுமையாக்கத்தை மக்கள் இயக்கமாக கொண்டு வர வேண்டும் என்று சைதையார் கருதியதன் நோக்கம் சாலைகளில் செல்வோரின் மனம் அமைதியாக இருக்க வேண்டும் என்பது தான். காந்தியடிகளின் கருத்துப்படி அமைதி [பசுமை] இயக்கம் என்றாலே அதை மாணவர்களிடம் இருந்து தான் தொடங்க வேண்டுமே அல்லாது பெரியவர்களிடம் இருந்து தொடங்குவது சரியாகாது. ஏனென்றால் மாற்றம் என்பது இனி வரும் இளைய தலைமுறைக்கானது. அதை அவர்கள் சரியாக புரிந்துகொண்டு சிறப்பாக செயல்பட வேண்டும். எனவே*

*மாநகராட்சி பள்ளிகளிடம் ஏற்கெனவே தன் சீர்திருத்தப் பணிகளால் நற்பெயர் பெற்றிருந்த சைதையார் அங்கிருந்தே தனது மக்கள் பசுமை இயக்கத்தைத் தொடங்கினார். நல்ல தொடக்கமே ஒரு செயலுக்கு நல்ல விளைவுகளை ஏற்படுத்தும்.*

**நொச்சி செடி வழங்கல்**

*பசுமையாக்கப் பணிகளில் பயனுள்ள மரம் செடி, கொடிகளை நட்டு வளர்ப்பதே சாலச் சிறந்தது. வெற்று செடிகளை வளர்ப்பதால் காய்ந்த இலையும் சருகும் கொசு சேர்வதுமாக தொல்லைகள் பெருகும் என்பதால் கொசு அண்டாத கொசு விரட்டியாக செயல்படுகின்ற நொச்சி செடிகள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டன. நொச்சி செடி வளர்க்க அதிக இடமோ தண்ணீரோ தேவையில்லை. வீட்டின் வாசல் ஓரமாக இரண்டடி இருந்தால் போதும். செடி ஒல்லியாக நெடு நெடுவென்று வளர்ந்து ஜலதோஷம், மூச்சு திணறல், ஆஸ்துமா, அலர்ஜி போன்ற நோய்கள் வரவிடாமல் தடுக்கும். நொச்சி செடிக்கு கொசு வராது. அதனால் கொசுவினால் ஏற்படும் நோய்களில் இருந்து மக்களை காக்கலாம் என்று சைதையார் திட்டமிட்டு இடமும் குறைவு பலனோ அதிகம் என்ற கணக்கில் இந்த செடியை வழங்கினார். மக்கள் நொச்சி செடியின் பலன்களை உணர்ந்ததனால் ஆர்வமாக செடி வளர்ப்பில் ஈடுபட்டனர். வழங்கப்பட்ட செடிகள் நூறல்ல; ஆயிரம் அல்ல; ஐந்து இலட்சம் ஆகும். இதுவே இருபது இலட்சமாக உயரும் போது சென்னையில் கொசுக்களே இருக்காது.*

*மாணவர்களும் பெற்றொரும் நொச்சி செடி வளர்ப்பில் ஆர்வம் காட்டினர். நோய் குறைந்தது. ஆரோக்கியம் பெருகியது. வீடுகளும் சாலைகளும் அழகும் தூய்மையும் பெற்றன. அங்கு வசிக்கும் மக்களும் புழங்கும் மக்களும் நல்வாழ்வு பெற்றனர்.*

*மாநகராட்சி மாணவர்களின் வீடுகளில் நொச்சி நட்டது போக இன்னும் கொஞ்சம் இடம் இருப்போருக்கு கூடுதலாக சில கன்றுகள் தரப்பட்டன. அவ்வாறு அருபத்தியாறு ஆயிரம் தென்னங்கன்றுகளும் ஆறரை*

*இலட்சம் பப்பாளி கன்றுகளும் வழங்கப்பட்டன. கொசுவால் வரும் டெங்கு காய்ச்சலுக்கு ஆங்கில மருத்துவத்தில் மருந்து இல்லாத நிலையில் பப்பாளி இலைச்சாறு அதை குணப்படுத்தும் மருந்து என அரசு அறிவித்தது. திருக்குறள்* ***“நோய்நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்”*** *என்பதால் சைதையார் நோய்க்கு காரணமான கொசுவை வளர விடாமல் அதை விரட்டும் நொச்சி செடிகளை வழங்கியும் பின்பு ஓரிருவருக்கு அந்நோய் வந்துவிட்டால் அதை குணமாக்கும் பப்பாளி இலைச் சாறு எடுக்க பப்பாளி மரங்களை வளர்க்கவும் திட்டம் தீட்டி மாணவர்கள் மூலமாக செயல்படுத்தினார். இதனால் பசுமை இயக்கமும் வெற்றி பெற்றது நோய் தீர்க்கும் முறைகளும் அறிமுகமாயின. ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்பது போல ஊரும் பசுமை ஆயிற்று மக்களும் நலவாழ்வு பெற்றனர். குறைந்த முயற்சியில் அதிக பலன் பெறுவது வணிக நிறுவனங்களின் நோக்கமாக இருப்பதுண்டு. இங்கு மக்கள் பணியிலும் இதை சைதையார் நடைமுறைப்படுத்தினார். மாணவர்களின் படிப்பும் மக்களின் அன்றாட பணிகளுக்கு இந்த நொச்சி, பப்பாளி தன்னை வளர்ப்பு இடையூறாக இருக்கவும் கூடாது அதே வேலையில் அவர்களுக்கு நற்பலன்கள் அதிகமாக கிடைக்கவும் வேண்டும் என்ற நோக்கில் திட்டங்களில் பன்முகப் பலனை அடையும் விதத்தில் ஆலோசித்து திட்டமிட்டு செயல்படுத்தினார்.*

### ***பனை மரம் நடுதல்***

*பசுமை மட்டும் இருந்தால் போதுமா பாதுகாப்பு வேண்டாமா? என்ற வினாவுக்கும் சைதையாரின் மக்கள் பணி திட்டங்கள் பதில் அளித்தன. கடற்கரை ஏரிக்கரை போன்ற பகுதிகளில் மணல் அரிப்பு ஏற்படுவதால் மழைக்காலத்தில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு இயற்கை பேரிடரை உண்டாக்குகிறது. இதை தடுக்கும் பொருட்டு பனை மரம் நடும் திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார். பனையின் சல்லி வேர் மணல் அரிப்பை தடுக்க வல்லது. எனவே, முன்பு நம் முன்னோர்கள் வரப்பை குறிக்கவும் ஏரிக் கரையின் எல்லக்கோட்டை வரையறுக்கவும் பனை மரங்களை நட்டனர். இம்மரங்கள் வெயிலுக்கும் மழைக்கும்*

*தாக்குப்பிடித்து நிற்கும். எந்த வெள்ளம் வந்தாலும் புயல் அடித்தாலும் கீழே விழாது. உலகின் இரண்டாவது அழகிய கடற்கரையான மெரினாவில் பதினைந்து கிலோ மீட்டருக்கு பனை மரங்கள் நடப்பட்டன. மூன்று மீட்டருக்கு ஒரு பனை மரம் என்ற வீதத்தில் இவை நடப்பட்டுள்ளன. இவற்றோடு சென்னை மாநகராட்சிப் பகுதிக்கு உட்பட்ட பகுதிகளில் உள்ள ஏரிகளிலுமாக மொத்தம் இருபது இலட்சம் பனை மரங்கள் நட திட்டமிடப்பட்டன. முதல் கட்டமாக ஐந்து இலட்சம் மரங்கள் நடப்பட்டுள்ளன.*

*தமிழகத்தின் மரமான பனை மரம் ஓலை, காய் [நுங்கு], கனி [பனம்பழம்], கிழங்கு [பனங்கிழங்கு], அடிமரம் என அதன் அனைத்து பாகங்களையும் பலனாக தருவதால் கற்பக விருட்சம் எனப்பட்டது. பனை ஓலையால் கூரை வேயலாம். ஏற்றுமதி பொருட்களான கொட்டான், கூடை, ஓலைப் பெட்டி, பேழைப்பெட்டி, விசிறி, பொம்மை போன்றன செய்யலாம். பதனியில் இருந்து வடிக்கப்படும் பதனீர், கோடை காலத்துக்கு குளிர்ச்சி தரும் அருமையான குடிநீர் ஆகும். பதநீரைக் காய்ச்சி எடுக்கும் பனங்கருப்பட்டி உடலுக்கு உரம் ஏற்றக்கூடியது. மெலிந்த தேகம் கொண்டவர்கள் தொடர்ந்து ஒரு மாதம் பனம்பொருட்களை உண்டு வந்தால் உடல் தேறிவிடுவர். மகளிர் சுய உதவி குழுக்களுக்கு தொழிற்பயிற்சி அளித்தால் பனை பொருட்களை கொண்டு வருமானம் பெற அவர்களுக்கு வழி கிடக்கும்.*

***பசுமைக்கு ஆதாரம் நீலம்***

*பசுமையாக செடிகள் காட்சி அளிக்க வேண்டும் என்றால் வானத்தின் நீலத்தை பிரதிபலிக்கின்ற நீர் வேண்டும். நீரின்றி அமையாது உலகு என்றார் வள்ளுவர். எனவே இந்த செடிகளுக்கான நீருக்கு ஆலோசனை செய்தார் சைதையார்.*

*பூங்காக்களுக்கு நிலத்தடி நீரை வார்க்காமல் கழிவு நீரை தூய்மையாக்கும் திட்டத்தை அறிமுகம் செய்தார். முதல் முயற்சியாக இரண்டு மூன்று இடங்களில் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டது. மூலிகை பூங்கா [ஆறாவது மண்டலம்], போகன் வில்லா பூங்கா [ஐந்தாவது மண்டலம்],*

மற்றும் மேயரின் அலுவலகம் அமைந்திருக்கும் ரிப்பன் மாளிகை ஆகியவற்றில் கழிவு நீரை சுத்தப்படுத்தும் சாதனங்கள் நிறுவப்பட்டன.

சாலைகளில் நடப்பட்ட செடிகளுக்கு சொட்டு நீர் பாசனம் மற்றும் தெளிப்பு நீர் பாசன முறைகள் பின்பற்றப்பட்டன. இதனால் குறைந்த நீரில் செடிகள் பசுமையாக தோன்றின. சாலைகளில் நடப்பட்ட செடிகளுக்கும் தண்ணீர் ஊற்றுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. செடிகளை நட்டு ஒரு புகைப்படம் எடுத்துக் கொண்டதுடன் நம் கடமை முடிந்தது என ஓய்ந்துவிடாமல் அதைத் தொடர்ந்து [follow up] பேணிக் காத்து பராமரித்து வருவதற்கான செயல் திட்டங்களையும் வகுத்து தந்தவர் சைதையார்.

**கடற்கரை சாலையில் நிழல் தரும் மரங்கள்**

சென்னையைப் பசுமையாக்க வேண்டும் என்ற திட்டத்துடன் தொடங்கிய திட்டம் மெரினாவின் கடற்கரைச் சாலைக்கும் விரிவு படுத்தப்பட்டது. அங்கு சிறிய செடியாக நட்டு மரமாக வளர்த்தெடுப்பது கடினமான செயல் என்பதால் வேறோரு இடத்தில் இருபது வருடங்களாக வளர்ந்த மரத்தை வேரோடு பிடுங்கிக்கொண்டு வந்து நட தீர்மானிக்கப்பட்டது. அவ்வாறு 210 மரங்கள் பல்வேறு இடங்களில் இருந்து வேரோடு பெயர்த்து எடுத்துவரப்பட்டு அவற்றிற்கெனத் தோண்டி வைத்திருந்த குழிகளில் நடப்பட்டு மண் நிரப்பட்டன. இந்த மரங்கள் எல்லாமே 25 அடி முதல் 30 அடி வரை உயர்ந்து வளர்ந்தவை ஆகும். சமூக சிந்தனையும் அறிவியல் சிந்தனையும் இணைந்து இருந்தால் மட்டுமே இது போன்ற திட்டங்களை செயல்படுத்த முடியும். அதிகாரிகள் இது போன்ற ஆலோசனைகளை சொன்னவுடன் சாக்கு போக்கு சொல்லும் அரசியல்வாதிகளும் தலைவர்களும் ‘இதெல்லாம் நடக்கிற காரியமா’ என்று தட்டிக்கழிப்பார்கள். ஆனால் செய்ய முடியும் என்று துணிந்து இறங்கும் ஒரு தலைவனுக்கு இயற்கையும் இறைமையும் துணை நிற்கும் என்பதற்கு இத்திட்டத்தின் வெற்றி ஒரு உதாரணம்.

அரவிந்தரின் ஆசிரமத்தில் ஒரு நாள் இரவில் அன்னை உறங்க முடியாமல் தவித்தாராம். அவருக்கு ஒரு அழுகுரல் காதில் கேட்டுக் கொண்டே இருந்ததாம். படுக்கையில் இருந்து எழுந்து விட்டார். அழுகுரல் வந்த திசையில் மரங்கள் அடர்ந்த சோலை பகுதிக்குள் நடந்து போனார். அப்போது ஒரு மரத்தில் கோடாரி வெட்டிய படி நிறுத்தப்பட்டிருந்தது. பகலில் மரம் வெட்டிய ஒருவர் மறுநாளும் இங்கே தானே வேலைக்கு வரப்போகிறோம்; எதற்கு இந்த கோடரியை வீட்டுக்கு சுமந்து செல்ல வேண்டும் என நினைத்து ஒரு பச்சை மரத்தில் கொத்தி வைத்துவிட்டு போய்விட்டார். அந்த பச்சை மரம் வலி தாங்காமல் அழுத குரல் அன்னையின் காதுகளில் கேட்டிருக்கிறது. அந்த கோடரியை அவர் எடுத்ததும் அதன் அழுகை நின்றுவிட்டது. அருளாளருக்கு மரம் செடி கொடி, மற்றும், பறவை, விலங்குகளின் உணர்வுகள் புரியும். அவை தம் குறையை அவர்களிடம் தான் சொல்கின்றன. வாடிய பயிரை கண்ட போதெல்லாம் வாடினேன் என்று இராமலிங்க வள்ளலாரும் வருந்துகிறாரே. அதுபோல மனிதேயச் செம்மலான சைதையார் உயிர் நேயச் செம்மலாகப் புகழடையும் வகையில் அவர் மரம் நட வேண்டும் என்று நினைத்ததும் அத்திட்டத்தின் வெற்றிக்கு மரங்கள் ஒத்துழைத்தன. எனவே வளர்ந்த மண்ணில் இருந்து பிடுங்கி வரப்பட்ட மரங்கள் வாடாமல் கருகாமல் மெரினாவின் கடற்கரை சாலையில் வேரூன்றி வளர்ந்து நிழல் அளிக்கின்றன. பெற்றோர் வீட்டில் விதைக்கப்பட்டு செடியாக வளர்ந்த பெண் அங்கிருந்து இடம் பெயர்க்கப்பட்டு கணவர் வீட்டில் வேரூன்றி விருட்சமாக தழைப்பது போல இம்மரங்கள் சைதையாருக்கு புகழ் சேர்த்தன. திட்டத்தின் நோக்கம் மக்கள் நலன் சார்ந்ததாக இருந்ததால் இயற்கையும் முழு ஒத்துழைப்பு கொடுக்கும் என்பதை இந்த கடற்கரை சாலையின் குளுமை உணர்த்துகிறது.

பசுமையாக்கம் என்ற திட்டம் சாலைகள் சாலை ஓரங்கள், சாலையின் நடுவில் மற்றும் சாலைகளின் சந்திப்பில் என செடி நடுதலோடு தோன்றி வீடுகளில் கொசு ஒழிப்புக்காக நொச்சி செடி திட்டமாக பரிணமித்து பின்பு தென்னங்கன்று, பப்பாளி செடி என வளர்ந்து ஏரிக்கரைகளிலும்

*கடற்கரையிலும் பனை மரம் வளர்ப்பாகப் பெருகி நிறைவாக கடற்கரைச் சாலையில் நிழல் தரும் பெருமரத்திட்டமாக வேரூன்றியது.*

***மக்கள் நலம் மக்கல் நலம் என்று கூறுவார் – தம்***

***மக்கள் நலம் ஒன்றே தான் மனதில் கொள்ளுவார்***

*என்று தன் குடும்பம் பிள்ளைகள் உறவு சுற்றம் என அரசியல்வாதிகள் தன்னலம் மிக்கவர்களாக திரிந்து போன இக்காலகட்டத்தில் இன்றும் மக்கள் தலைவரான எம்.ஜி.ஆர். அவர்கள் காட்டிய வழியில் இந்த மக்களுக்கு என்னென்ன செய்யலாம் என்று சிந்தித்து செயலாற்றிய பின்பும் ஓய்வு கொள்ளாமல் இன்னும் என்னவெல்லாம் செய்யலாம் என்று ஒவ்வொரு வினாடியும் சிந்திக்கின்ற சைதையார் முதன்மையான மக்கள் தலைவர் ஆவார்.*

***ஏரிக்கரையில் ஒரு பசுமை பூங்கா***

*மக்களின் நலவாழ்வுக்கு அடிப்படை ஆதாரம் அமைதியான மனமும் உண்மையான உழைப்பும் ஆகும். இதை நன்குணர்ந்த மாவீரன் நெப்போலியன் “அமைதியான மனமே உடம்புக்கு குணம் அளிக்கும் [The best cure for the body is the quiet mind] என்றார். ஆரவாரமான நகர் வாழ்க்கையில் அல்லல்பட்டு உழலும் மனதுக்கு அமைதி அளிக்கும் விதமாக சைதையார் ஒரு திட்டம் வகுத்தார். நகரை ஒட்டி அமைந்துள்ள சேத்துப்பட்டு ஏரியை புனரமைத்து, ஆழப்படுத்தி அங்கு படகு விடலாம். ஏரியைச் சுற்றிலும் பசுமைப் பூங்கா அமைத்து அங்கு மக்களுக்கு மனோகரமான சூழ்நிலையை ஏற்படுத்தி தரலாம் என்று முடிவு செய்தார். இதனால் அதிக எண்ணிக்கையிலான மக்கள் வார இறுதி நாட்களில் சுகமான மனநிலையை பெற்று மகிழ்ந்தனர்.*

*அருள் இருக்கும் இடத்தில் கருணை நிலைக்கும் [Where grace flows mercy thrives] என்பது ஆன்றோர் வாக்கு. இன்னார் இனியார் என்று இல்லாமல் எல்லோரிடமும் காட்டும் அன்பை அருள் என்ற பெயரால் தமிழிலக்கணம் அழைக்கிறது. சைதையாரும் தனக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இன்றி அனைத்து*

மக்களிடமும் அன்பு காட்டினார். நல்ல மழை பெய்யும் காலத்தில் சேத்துப்பட்டு ஏரியில் தண்ணீர் நிரம்பி வழிந்து பூந்தமல்லி நெடுஞ்சாலையிலும் கே. எம். சி மருத்துவமனைக்கு உள்ளேயும் போய் அந்த இடத்தை சேறும் சகதியுமாக மாற்றிவிடும். அப்போது அந்த இடம் நோயின் உற்பத்தி ஸ்தலமாக மாறிவிடும். மக்களை நோயில் இருந்து காக்கவும் உபரி நீர் வெளியாகி வீணாகாமல் தடுக்கவும் சைதையார் மக்கள் நலத் திட்டம் ஒன்றைத் தீட்டினார். அந்த ஏரியை ஆழப்படுத்தி அதன் கரையில் பூங்கா அமைத்து நீரின் கொள்ளளவை அதிகமாக்கி அதில் படகு விட முடிவு செய்தார். 'நன்றே செய்க அதுவும் இன்றே செய்க அதுவும் இன்னே இப்பொழுதே செய்க' என்றனர் தமிழ்ச் சான்றோர். முன்னோர் வாக்கை பொன்னே போல் போற்றும் தகைமையாளரான சைதையார் நல்லதொரு திட்டமானது தன் எண்ணத்தில் உதித்தவுடன் அதற்கான செயற்பாடுகளில் இறங்கினார்.

### முதல்வர் மகிழ்ச்சி

ஏரிக்கு அருகே கீழ்ப்பாக்கம் மருத்துவமனைக்கு பின்னால் மீன் வளத்துறைக்கு சொந்தமான பதினைந்து ஏக்கர் நிலம் பயன்பாடற்று கிடந்தது. சைதையார் மீன் வளத்துறை அமைச்சரை சந்தித்து அந்த இடம் கிடைத்தால் சேத்துப்பட்டு ஏரியை சுற்றி ஒரு பொழுதுபோக்கு மையம் அமைக்கலாம் என்று கூறினார். மேலும் பசுமை பூங்கா மற்றும் படகு விடுதல் திட்டத்தை அவர் விளக்கவும் அமைச்சர் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். பின்பு அதிகாரிகளைக் கொண்டு முறைப்படி ஒரு திட்ட வரைவை தீட்டினார். சேத்துப்பட்டு ஏரி புனரமைப்புத் திட்ட வரைவை முதல்வர் ஜெயலலிதாவிடம் அளித்தார். வீணாகப் போகும் தண்ணீரையும் வெட்டியாகக் கிடக்கும் நிலத்தையும் மக்களின் பயன்பாட்டுக்குக் கொண்டு வரலாம் என்றதும் அம்மா மகிழ்ச்சி அடைந்தார். சைதையாரை அழைத்து பாராட்டி அத்திட்டத்தை விரைவாகச் செயல்படுத்தும்படி வாழ்த்தினார்.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக சைதையார் கொண்டு வரும் புதுப்புதுத் திட்டங்களைக் கண்டு

பூரிப்படைந்த முதல்வர் ஜெயலலிதா அவருடைய திட்டங்கள் பலருக்கும் நன்மை தரும் வகையில் இருக்கும்; யாருக்கும் கெடுதல் தராது; தனது ஆட்சிக்கு மக்கள் மத்தியில் நல்ல பெயரை ஏற்படுத்தி தரும் என்பதை நன்கு அறிந்து வைத்திருந்தார். சேத்துப்பட்டு ஏரியும் அதன் சுற்றுப்புறமும் அழகுபடுத்தப்பட்டால் நல்லதொரு சுற்றுலா தலமாகவும் பொழுதுபோக்கு மையமாகவும் திகழும் என்பதால் முதல்வர் ஜெயலலிதா மிகுந்த மகிழ்ச்சியுடன் இத்திட்டத்தை பற்றி பேரவையில் அறிவித்தார். உடனே சைதையார் திட்டத்தை நிறைவேற்றும் பணிகளை மின்னல் வேகத்தில் தொடங்கினார்.

**பசுமை பூங்கா**

ஏரிக்கரையின் சுற்றுப்பகுதி சுத்தப்படுத்தப்பட்டது. கரை உயர்த்தப்பட்டது. ஏரியில் தூர் வாரும் பணிகள் தொடங்கின. ஏரி நிரம்பினால் மருத்துவமனை பக்கமோ நெடுஞ்சாலையிலோ தண்ணீர் பெருகாதபடி மழை நீர் வாய்க்கால்கள் அமைக்கப்பட்டன. ஏரியின் கொள்ளளவு அதிகமானது. ஏரியில் நீரின் அளவு அதிகமானதும் சுற்றுப்பகுதிகளில் நிலத்தடி நீர் மட்டம் உயர்ந்தது. இந்தப் புனரமைப்புப் பணிகளுக்கு வேலைக்கு அந்தப் பகுதி மக்களையே பணிக்கு அமர்த்தியதால் அவர்களின் வருமானமும் வாழ்க்கைத்தரமும் உயர்ந்தது. கழிவு நீர் பிரித்து விடப்பட்டு ஏரித் தண்ணீர் தூய்மையானதால் கொசுத் தொல்லை டெங்கு காய்ச்சல், சிக்குன் குனியா காய்ச்சல் போன்ற நோய்களின் தாக்கமும் குறைந்தது. அப்பகுதி வாழ் மக்களின் ஆரோக்கிய வாழ்வும் நிலைபெற்றது.

ஏரியைச் சுற்றிலும் வண்ண வண்ணப் பூக்கள் மலரும் செடிகளும் மருத்துவ பண்புடைய மூலிகை செடிகளும் நடப்பட்டு அழகிய பூங்கா உருவானது. நடை பாதைகள் அமைக்கப்பட்டன. மக்கள் உட்கார்ந்து இளைப்பாற கல் பலகைகள் இடம்பெற்றன. வந்தவர்களுக்கு குடிநீர் வசதியும் கழிப்பறை வசதியும் இருந்தன. பேருந்து வசதி ஏற்படுத்தப்பட்டது. பூங்காவுக்கு வரும் மக்கள் கூட்டம் அதிகரித்தது. சொந்த வண்டிகளில் வருவோருக்கு அடுக்கு வாகன நிறுத்தம் புதுமையாக அமைக்கப்பட்டது.

*அதுவரையிலும் எந்த பூங்காவிலும் இந்த வசதி கிடையாது. இவ்வளவு கூட்டமும் கிடையாது.*

*வண்ணத்து பூச்சிகளை கவர்ந்திழுக்கும் வகையில் மகரந்த பூங்கா ஒன்றும் அமைக்கப்பட்டது. இப்பூங்கா சிறுவர்களை மிகவும் கவர்ந்தது. பல நிறத்தில் வண்ணத்து பூச்சிகள் இங்கு பறந்து திரிந்தன. வண்ணப் பூச்செடிகளிலும் மூலிகை செடிகளிலும் உள்ள மலர்களின் மீது இந்த வண்ணத்து பூச்சிகள் அமர்ந்து பறந்தன.*

***கரையை காக்கும் பெருமரங்கள்***

*வெயில் காலத்தில் சில அணைக்கட்டுகளே வறண்டு போய் அதன் பூங்காக்கள் காய்ந்து போய் காணப்படும் அந்த அவலநிலை இந்த பூங்காவுக்கு ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக சைதையார் முன்கூட்டியே கரையோரங்களில் நல்ல மரங்களை நட்டு வளர்த்தார். இவை நிழல் தரும் மரங்களாக செழித்தன. ஆல், அரசு, புன்னை, பூவரசு என குளிர் தருக்களை நட்டு வளர்த்ததால் அருங்கோடையிலும் ஏரிக்கரை பூங்காற்று சிலுசிலுவென குளிர்ச்சியாக வீசியது. மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து மரத்து நிழலில் குளிர்ச்சியான காற்றை அனுபவித்தனர். மின் விசிறியின் வெப்பக் காற்றில் இருந்தவர்களுக்கு இந்த மென்காற்று சுகானுபவமாக இருந்தது. அருகில் பூங்காவில் வளர்க்கப்பட்டிருந்த துளசி, திருநீற்று பச்சிலை போன்ற மூலிகைகளின் வாசம் அவர்களின் மனதுக்கு இதமாக இருந்தது. நல்ல புல்வெளிகள் அமைக்கப்பட்டு இருந்ததால் சிறுவர்கள் கிழே விழுந்து அடிபடாமல் பாதுகாப்பான நிலையில் ஓடி விளையாடினர். வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் இப்போது பிள்ளைகளை ஓடி விளையாட யாரும் அனுமதிப்பதில்லை. இவர்களுக்கு இந்த பூங்கா வரப்பிரசாதமாக அமைந்தது.*

*தனியாக சிறுவர்கள் விளையாட ஒரு சிறுவர் பூங்கா அமைக்கப்பட்டது. அங்கு ஊஞ்சல் ஏணிப்படிக்கட்டு, குடை ராட்டினம், ரங்க ராட்டினம், மினி ரயில், சறுக்கு போன்றவை இடம் பெற்றிருந்தன. இங்கும் சிறுவர்கள் நன்றாக*

விளையாடி மகிழ்ந்தனர். பள்ளிகளும் தம் மாணவர்களை இங்கு அழைத்துவந்து விளையாட வைத்தனர்.

மாநகராட்சி பூங்காவில் இருக்கும் நடைப்பயிற்சி வசதியும் இங்கு தனியாக அமைக்கப்பட்டது. மாதக் கட்டணம் செலுத்தி மக்கள் வந்து இந்த நடை பாதைகளை காலையிலும் மாலையிலும் பயன்படுத்திக்கொண்டனர்.

### மீன் பிடித்து மீண்டும், ஆற்றில் விட்டுவிட வேண்டும்

சுற்றுலா மையமாக தோற்றுவிக்கப்பட்ட சேத்துப்பட்டு ஏரிக்கரைப் பூங்கா இன்னுமொரு புதுமையையும் கொண்டிருந்தது. வெளிநாட்டில் இருப்பது போல மீன் பிடிக்கும் வசதி ஒரு பொழுது போக்கும் அம்சமாக சேர்க்கப்பட்டது. மீன் பிடிக்க தூண்டில்கள் விற்கப்பட்டன. மீன் பிடித்து பழக்கமில்லை எனக்கு தெரியாது ஆனால் பழகிக்கொள்ளும் ஆர்வம் இருக்கிறது என்று கருதுவோருக்கு உதவ பயிற்சியாளர்கள் நியமிக்கப்பட்டனர். இவர்கள் மீன் பிடிக்க கற்றுத்தருவர். மீன் பிடித்து மீண்டும் ஆற்றில் விட ஆசை என்று ஒரு சினிமா பாட்டில் வருவது போல இங்கு மீன் பிடித்து மீண்டும் ஆற்றில் விட்டுவிட வேண்டும். இவர்கள் மீன் பிடித்து விளையாடுவதற்காக நாட்டு மீன்கள் ஏராளமாக ஏரியில் வளர்க்கப்பட்டன. ஏரியில் மற்ற இடங்களில் இருக்கும் மீன் வகைகளான பெருங்கெண்டை, கட்லா, ரோகு, மிர்கால் போன்றவையும் வளர்க்கப்பட்டன. மீன்கள் சுவாசிக்க வசதியாக ஏரியின் அடியில் ஆக்சிஜன் வாயு குழாய்கள் பதிக்கப்பட்டன. ஏரி நீர் அழுக்காகாமல் இருக்கவும் தனி முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

மீன்களை மற்றும் நீர் வாழ் உயிரினங்கள் பற்றி சிறுவர்களும் பெரியவர்களும் அறிந்துகொள்ள தகவல் பலகைகள் ஆங்காங்கே வைக்கப்பட்டிருந்தன. இவை சிறியவர் மற்றும் பெரியவர்களின் மீன் குறித்த அறிவைப் பெருக்கின. மீன் வளம் குறித்து அறிய ஓர் ஊடக மையம் பூங்காவுக்குள் அமைக்கப்பட்டது.

### மீன் உணவு

ஏரியில் பிடித்த மீனை சுவையாக சமைத்து தரும் மீன் உணவகம் ஒன்றும் பூங்காவில் நிறுவப்பட்டது. மக்கள் இந்த

*திட்டத்தை வெகுவாக ரசித்து மீன் உணவை ருசித்தனர். மீனின் விலையோ குறைவு ருசியோ அதிகம். எனவே மக்களின் ஏகோபித்த வரவேற்பை இந்த மீன் உணவகம் பெற்றது.*

***படகு சவாரி***

*ஏரியில் நீர் நிறைந்திருக்கிறது என்றால் மக்களுக்கு படகில் போய் வரவேண்டும் என்ற ஆவல் வருவது இயற்கை. எனவே படகு சவாரிக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தனி நபர்களின் உற்சாக பயணத்துக்கு ஏற்றபடி தனிப்படகுகளும் குடும்பமாக வருவோர் பயணிக்க பெரிய படகுகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.*

***என்றும் நின்றும் நிலைக்க***

*பூங்காவின் செயற்பாடும் சிறப்பும் என்றும் நின்று நிலைக்க வேண்டும் என்பதை விரும்பிய சைதையார் இதன் மண்ணின் தரம், தண்ணீரின் தரம், ஏரி நீரில் வாழும் மீன்களின் உடல்நிலை, நோய் அறிகுறி போன்றவற்றில் ஆய்வுப்பணிகள் நடத்தி குறைகளை களைந்து சீர்படுத்த ஆவண செய்தார். இப்பணிகள் தொடர்ந்து நடைபெற்றால் சேத்துப்பட்டு பூங்கா, சென்னை வாழ் மக்களின் மனங்கவரும் பூங்காவாகத் திகழும் என்பதில் ஐயமில்லை. சைதையார் தொடங்கி வைத்த இந்த பசுமை பூங்கா திட்டம் சென்னையை சண்டீகர் நகரம் போலவும் மேனாட்டு நகரம் போலவும் தரம் உடையதாக மாற்றுவது உறுதி.*

# 4. பூங்காவும் விளையாட்டும்

மக்களின் பொது மகிழ்விடமாக விளங்கும் பூங்காவில் சிறுவர்களும் இளைஞர்களும் தம் உடல்நலம் மேம்படும் வகையில் விளையாடி மகிழ விளையாட்டு திடல்களை சைதையார் ஏற்படுத்த திட்டம் உருவாக்கினார். விளையாட்டு என்றால் ஒரு கூடை பந்து வலை, ஒரு எறி பந்து வலை, ஒரு சறுக்கு, ஒரு ஊஞ்சல் என பேருக்கு ஒரு சில உபகரணங்களை மட்டும் வைத்து கணக்கு காட்டாமல் அக்கறையுடன் தேடிச் சென்று பார்த்து பயனுள்ளவை என முடிவு செய்த பல புதிய விளையாட்டு சாதனங்களை அமைத்தார்.

இரும்பினால் செய்தவற்றை வாங்கினால் அவை மழைக் காலத்தில் துருப்பிடித்து பின்பு பயனற்று போய்விடுகின்றன என்பதால் எஃகினால் செய்தவற்றை வாங்கினார்.

ஒரு நல்ல நிர்வாகியின் திறமை பற்றி குறிப்பிடும்போது சிக்கல்களுக்கான தீர்வுகளை உடனடியாக கண்டுபிடிக்க வேண்டும் அவை நிரந்தரமான தீர்வுகளாகவும் இருக்க வேண்டும் என்று கூறுவர். அந்த வகையில் சைதையார் எந்த பிரச்சனைக்கும் நொடிப்பொழுதில் தீர்வையும் சொல்லி அதை நடைமுறைப்படுத்தும் வழிகளையும் சொல்லி அவை செயல்படுத்தப்படுகின்றனவா என்று அவ்வப்போது கண்காணித்தும் வருவார். எனவே, அவர் ஒரு திட்டத்தை செயல்படுத்த முனைந்துவிட்டால் அது நூறு சதவீதம் சிறப்பானதாக மட்டுமே அமையும். விளையாட்டு சாதனங்கள் வாங்கும்போது அவை பழுதடைந்துவிடக் கூடாது அடிக்கடி பராமரிப்பும் தேவைப்படக் கூடாது நீண்ட காலத்துக்கு தாக்குப்பிடிக்கக் கூடியனவாக இருக்க வேண்டும், என்பதை கருத்தில் கொண்டு எஃகினால் செய்யப்பட்டவற்றை வாங்கி

*அமைத்தார். அவை நீண்ட காலத்துக்கு அவரது நிர்வாக சிறப்பைப் பறைசாற்றிக் கொண்டே இருக்கும். சைதையார் எடுத்த முயற்சிகளை கண்டும் கேட்டும் உணர்ந்த பெற்றோர் பலர் அவரை நேரில் சந்தித்து வாழ்த்தி பாராட்டினர். அந்த பூங்காக்களில் அவர்களின் குழந்தைகள் காலை மாலை வேளைகளின் விளையாட்டு பயிற்சிகளை முறையாக பெற்றனர். உடைந்த இரும்பு துருப்பிடித்த இரும்பு போன்றவற்றால் குழந்தைகளுக்கு எவ்வித ஆபத்தும் நேரிடாத வகையில் சைதையார் எஃகினால் செய்த விளையாட்டு சாதனங்களை வாங்கி நிறுவியதால் அவற்றைப் பயன்படுத்துவோர் பாதுகாப்பாகவும் சந்தோஷமாகவும் உணர்ந்தனர்.*

*விளையாட்டுக்கு முக்கியத்துவம் அளிப்பதில் சைதையாருக்கு நிகர் சைதையாரே என்று அறுதியிட்டு கூறலாம். மாநகராட்சி பள்ளிகளில் அவர் விளையாட்டுக்கு அளித்த முக்கியத்துவத்தை முதல் இயலில் கண்டோம். அதே ஆர்வத்தை அவர் பூங்காக்களில் விளையாட்டு திடல் அமைப்பதிலும் காட்டினார். பூங்காவில் யோகா மையம் அமைத்து முதியவர்களின் நலவாழ்விலும் நற்சிந்தனையிலும் அக்கறைக் காட்டிய சைதையார் அதே அக்கறையை சிறுவர்களின் மற்றும் இளைஞர்களின் ஆரோக்கியத்திலும் காட்டினார். எனவே அவர் விளையாட்டுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தார். தனியார் பள்ளிகளில் இலட்சக் கணக்கில் கட்டணம் செலுத்தி படிக்கும் சிறுவர்களுக்கு அங்கு விளையாட போதிய நேரம் கிடைப்பதில்லை. அவர்கள் மாநகராட்சி பூங்காக்களில் உள்ள இந்த விளையாட்டு திடல்களில் விளையாடலாம்.*

*விளையாட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்த அரசு 2001 இல் உருவாக்கப்பட்ட தேசிய விளையாட்டு கொள்கையில் அனைத்து பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் விளையாட்டுக் கல்வியை கட்டாயமாக்கியது.*

*விளையாட்டு என்பது மனிதர்களின் உறுதியான தசை, எலும்பு வளர்ச்சி, மூட்டு இணைப்பு உறுதி போன்றவற்றை வலிமை ஆக்குகிறது. எனவே ஓடி ஆடி விளையாடும்போது சிறுவர்களின் நுரையீரல் விரிவடைந்து அதிகளவில்*

ஆக்சிஜனை உட்சுவாசிக்கின்றனர். இதனால் இரத்த ஓட்டம் விரைவு பெறுகிறது. ஓடி விளையாடி களைப்படையும் போது சிறுவர்களுக்கு நல்ல பசி எடுக்கும் உண்ணும் உணவு எளிதில் செரிக்கும். சிறுவர்களோ இளைஞர்களோ கூடி விளையாடும்போது மனித நேயச் சிந்தனை வளரும். வெற்றி தோல்வி பழகும். ஆரோக்கியமான போட்டிக்கு தயாராவார்கள். குழு மனப்பான்மையும் செயற்பாடும் திட்டமிடலும் தோன்றும். தன்னம்பிக்கை அதிகரிக்கும் மகிழ்ச்சி பெருகும். மன நலம் சீராகும். விளையாட்டுகளில் தோல்விக்கு பிறகு வரும் வெற்றியை அனுபவித்துப் பழகியதால் தற்கொலை மனப்பான்மை வராது. தோல்வியால் துவண்டு போக மாட்டார்கள். மற்றவர்களின் வெற்றியை மனமுவந்து ஏற்றுக்கொள்வர். அவர்களின் விளையாட்டு உத்திகளை பாராட்டுவர். தாமும் புதுப்புது உத்திகளைக் கண்டுபிடிக்க முயல்வர். விளையாட்டு மனித மூளையில் செரோட்டோனின், டோபோமின், மற்றும் நோரன் பைனிஃப்ரைன் போன்ற சுரப்புகளை சுரக்க உதவுவதால் தினமும் அரை மணி நேரமாவது அனைவரும் ஏதேனும் ஒரு விளையாட்டில் ஈடுபட வேண்டும்.

### ஸ்கேட்டிங் பயிற்சி

ஸ்கேட்டிங் என்பது பனி நிரம்பிய பகுதிகளில் மலைச் சரிவுகளில் மனிதர்கள் பயன்படுத்திய பனிச்சறுக்கு காலணி ஆகும். இது பணக்காரர்கள் தம் குழந்தைகளை சிம்லா, டார்ஜீலிங் போன்ற மலை பகுதிகளுக்கு ஓய்வுக்கு அழைத்துச் செல்லும்போது விளையாடி மகிழ கற்றுக்கொடுப்பார்கள். இந்திப்படங்களில் இந்த பனிச்சறுக்கு விளையாட்டை காணலாம். தமிழ் படங்களில் சிலவற்றில் மட்டும் காண முடியும். இந்த மேட்டுக்குடியினரின் விளையாட்டை ஏழை குழந்தைகளுக்கு எட்டும்படி செய்தவர் சைதையார். மாநகராட்சி பூங்காக்களில் விளையாட்டு திடல் அமைக்கும்போது அங்கு பனிச்சறுக்கு பயிற்சி களத்தையும் அமைத்தார். சேரிச் சிறுவர்களும் ஏழை சிறுவர்களும் பனிச்சறுக்கு பயிற்சி பெற்று மகிழ்ந்தனர். படிப்பில் பயிற்சியில் ஏழை பணக்கார வேறுபாடுகள் களையப்பட வேண்டும் என்ற மனித நேயச் சிந்தனை கொண்ட சைதையார்

இந்த பயிற்சி எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்தார். பெற்றோரின் உள்ளம் பூரித்தது. இளைஞர்களும் பூங்கா திடல்களில் அமைக்கப்பட்ட பனிச்சறுக்கு களத்தில் ஓடு பாதையில் பயிற்சி பெற்றனர்.

தம் குழந்தைகளை விளையாட்டு பயிற்சி பெற பூங்காக்களுக்கு அழைத்து வரும் பெற்றோர் பிள்ளைகள் பயிற்சி பெறும் நேரத்தை காத்திருத்தலில் வீணாக்காமல் அவர்களும் தமது உடல் நலனை பேணும் வகையில் சில உடற்பயிற்சி சாதனங்களை சைதையார் அங்கு நிறுவ செய்தார். இதனால் பெற்றோர்களும் பயனடைந்தனர். குறிப்பாக தாய்மார்கள் தம் பிள்ளைகள் விளையாட்டு பயிற்சி பெறுகின்ற அதே நேரத்தில் தாமும் உற்சாகமாக உடற்பயிற்சி செய்கின்றனர். தாயும் சேயும் உடல் நலத்தில் அக்கறை காட்டிய பிறகு ஒரு நாட்டின் நலவாழ்வுக்கு என்ன குறை? இந்த உடல்நலம் சார்ந்த அக்கறையை மக்கள் மனதில் உண்டாக்கியவர் மனிதநேயச் செம்மல் சைதையார் என்பதை அறுதியிட்டு கூறலாம்.

இனி என்ன நன்மை செய்யலாம் யாருக்கு செய்யலாம் என்று தமக்குள் வினவிய சைதையாரின் மனக்கண்ணில் மாற்று திறனாளிகள் தோன்றினர். இவர்களும் பூங்காவை பயனபடுத்தும்படி செய்யவேண்டுமே என்று முடிவெடுத்த சைதையார் அவர்கள் வந்து செல்ல சாய்தளப் பாதையும் அமைக்கும்படி உத்தரவிட்டார். மாற்றுத் திறனாளிகள் வீட்டுக்குள் முடங்கிக் கிடக்காமல் திறந்த பசுமை வெளியில் உலாவி நல்ல காற்றையும் மூலிகை மணத்தையும் சுவாசித்து பயனடையும் வகையில் சைதையார் சிந்தித்து செயலாற்றினார்.

ஒரு தாய் தனக்கு எத்தனை குழந்தைகள் இருந்தாலும் அத்தனை பேருக்கும் அவரவர் தேவைகளை மனதில் சிந்தித்து அவற்றை நிறைவேற்றி வைப்பாள். அது போல சைதையாரும் மாநகர் தந்தை மட்டுமல்லாது சென்னை மாநகர் மக்களுக்கு தாயைப் போலவும் செயல்பட்டார்.

முன்பு பூங்கா பராமரிப்பாளர்கள், காவலர்கள் மிகவும் பயப்படுவார்கள் சிறுவர்கள் அல்லது இளைஞர்கள் வந்து மாநகராட்சி பூங்காக்களின் சாதனங்களை உடைத்துவிட்டு

*சேதப்படுத்திவிட்டுப் போய்விடுவார்கள். அந்த சேதத்துக்கு அதிகாரிகள் காவலர்களைத் திட்டுவார்கள். எனவே காவலர்கள் சிறிது நேரம் மட்டும் பூங்காவை திறந்து வைத்துவிட்டு பின்பு பூட்டிவிடுவார்கள். இதனால் பல இலட்சம் செலவு செய்து அமைக்கப்பட்ட பூங்கா யாருக்கும் பயனில்லாமல் இருக்கும். சைதையார் தம் நிர்வாகத்தில் இந்நிலையை மாற்ற விரும்பினார். பூங்காவின் முழுப்பலனும் மக்களுக்கு கிடைக்க வேண்டும் என்றால் அதிக நேரம் திறந்துவைக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்தார். நடைப் பயிற்சிக்கு வருவோர் சென்னை நகர வீதிகளில் அதிகாலை ஐந்து மணிக்கே நடக்க தொடங்கி-விடுவார்கள். அது போல பூங்காவிலும் நடைப் பயிற்சிக்கு வருவோர் பயன்பெற வேண்டும் என்பதனால் காலை ஐந்து மணிக்கே பூங்காவை திறக்கும்படி உத்தரவிட்டார். மக்கள் வேலைக்கு போகும்வரை பூங்கா திறந்திருக்கும். காலை பத்து மணி ஆனதும் பூட்டப்படும் அதன்பிறகு பூங்காவில் யாருக்கும் வேலையில்லை. இனி திரந்துவைத்தால் சமூக விரோதிகள் வேலை வெட்டி இல்லாதவர், வந்து ஆக்கிரமித்துக் கொள்வார்கள். எனவே work while you work and play while you play என்பதற்கிணங்க வேலைக்கு போகும் நேரங்களில் பூங்கா பூட்டியிருக்கும். மாலை ஐந்து மணிக்கு வேலை முடிந்து வந்தபிறகு பூங்கா திறக்கப்படும். ஐந்து மணி முதல் இரவு பத்து மணி வரை திறந்திருக்கும். பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் நல்ல பதுகாப்பான சூழ்நிலை பூங்காவில் நிலவியது. பள்ளி, கல்லூரி மற்றும் வேலைக்கு சென்று வந்தவர்கள் விரும்பிய படி விளையாடவும் உடற்பயிற்சி செய்யவும் பெரியவர்கள் நடை பயிற்சி மேற்கொள்ளவும் பூங்காக்களுக்கு வந்து சென்றனர். விளையாட்டுத் திடல்களைக் கொண்ட பூங்காக்கள் மக்களின் நல வாழ்வு இல்லங்களாக மாறிவிட்டன.*

***விழிப்புணர்ச்சி பிரச்சாரம்***

*பூங்காக்களில் மக்கள் கூட்டம் அதிகமானதும் விழிப்புணர்ச்சி ஆர்வலர்கள் தம் பரப்புரையை அங்கு நிகழ்த்த விரும்பினர். மக்களிடம் பல சமுதாய சீர்திருத்த கருத்துக்களை பரப்ப அனுமதி கேட்டனர். இயற்கை உணவு,*

இலக்கிய சிந்தனை, சமூக சீர்திருத்தக் கருத்துக்கள் போன்றவற்றை பரப்பும் நாடகங்களை நடத்த அனுமதித்தார். பொழுது போகாதவர்களும் கையாலாகாதவர்களும் பிற மீது குற்றம் சுமத்தி மகிழும் வெட்டி ஆட்களும் வந்து உட்கார்ந்து வீண் அரட்டை அடிக்கும் இடமாக இல்லாமல் பொது நன்மை கருதி உழைக்கும் சமூக வீரர்களின் விழிப்பூணர்வுப் பிரச்சார களமும் ஆயிற்று. விழிப்புணர்வு பிரச்சார நோக்கில் நடத்தப்பட்ட ‘பூங்காவில் தெருக்கூத்து’ நிகழ்ச்சிகள் மக்கள் மனதை கவர்ந்தன.

நாடகம் என்பது நாட்டு மக்களின் அகத்தில் உள்ள தாகத்தையும் தவிப்பையும் காட்டுவதாகும். மக்களின் ஆசை துக்கம் பிரச்சனை அதற்கான தீர்வு ஆகியன அகம் நாடும் வாகியில் விளக்குவதே நாடகம் ஆகும். விழிப்புணர்ச்சி நாடகம் என்பது மக்களின் சோகம் அதற்கான காரணம் அதற்குரிய தீர்வு ஆகியவற்றை அவர்களுக்கு உணர்த்தும் வகையில் அமையும். இத்தகைய கருத்துள்ள நிகழ்ச்சிகள் மக்களுக்கு தமது நிலையை புரிய வைக்கும். அவர்களை ஆக்கப்பூர்வமான வழியில் சிந்திக்க தூண்டும். நம் பூங்காவுக்கு வரும் மனிதர்கள் காதுகளில் திருக்குறள் ஒலித்தது போல கண்களில் விழிப்புணர்ச்சி காட்சிகள் மலர்ந்து அவர்களின் கருத்தில் சென்று சேர்ந்தன. அதே வேளை சைதையார், இலாப நோக்கில் காசுக்காக நிகழ்ச்சிகள் நடத்துவதில்லை என்ற திடமான முடிவை எடுத்திருந்தார். பூங்காக்கள் சமூகப் பள்ளிகளாக தரம் உயர்ந்தன. இயல் இசை நாடக மன்றம் தரமான நிகழ்ச்சிகளை நடத்தியது. நல்லவர் கை பட்டால் எல்லாம் நல்லவையாக மாறும் என்பதில் இருவேறு கருத்துக்கு இடமில்லை. சேவை நோக்கத்துக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு பூங்கா மூலமாக மக்கள் நலம் காக்கப்பட்டது.

நல்ல மாணவனின் இலக்கணம் கூறும் நன்னூல் என்னும் தமிழ் இலக்கண நூல் தாகம் கொண்ட ஒருவன் தண்ணீரை இன்னும் இன்னும் என்று அள்ளி எடுத்து பருகுவது போல மக்கள் பணியில் தாகம் கொண்ட சைதையாரும் பூங்காவில் மக்களுக்கு இன்னும் என்னென்ன நன்மைகள் செய்யலாம் என்று ஆராய்ந்து அடுத்து ஒரு

*திட்டத்தை அறிமுகம் செய்தார். அது பறவை வளர்ப்பு திட்டம்.*

*பூங்கா என்றால் செடிகொடிகள் இருக்கும். அவை தானே பறவைகளுக்கு ஆதாரம். பறவைகளுக்கு நிழலும் உணவும் கொடுத்தால் அவை பலுகி பெருகும் அல்லவா. பூங்காக்களில் கிளி, மைனா, குருவி, காகம், புறா போன்ற பறவைகள் வந்து அமர்ந்து இரை திண்பதற்கு என தனி இடத்தை ஒதுக்கினார். அதுவும் இறைவனின் படைப்பில் உயர்ந்ததுதானே. எனவே அதற்கும் பூங்காவில் ஒரு இடம் கொடுத்தார். நிழலும் உணவும் கிடைத்ததால் பறவைகளின் எண்ணிக்கை பெருகியது. அழிந்து வருவதாக நம்பப்பட்ட சிட்டுக்குருவிகளின் கீச்சொலி பூங்காக்களில் ஒலித்தது. ''அருளொலி பொங்கும் பறவைகள் ஒலி கேட்டேன்'' என்று கண்ணதாசன் பாடியது போல பறவைகள் தம் ஒலியால் காலையிலும் மாலையிலும் தம் மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்தன.*

# 5. கல்வி மேம்பாடு

**‘இளையோர் கூட்டம் தலைமை தாங்கும் பூமியே புதிய பூமி’** என்பதால் இளையோரை அறிவிற் சிறந்தவராக ஆற்றல் மிக்கவராக புதிய பாரதத்துக்கு தலைமை ஏற்கும் தகுதி படைத்தவராக உருவாக்க கல்விக்கண் திறக்கப்பட வேண்டும் என்பதை உணர்ந்த **நவயுக சிற்பி சைதையார்** தன் பொது வாழ்வில் கல்வி தொண்டுக்கு முதலிடம் அளித்தார். ஏழை எளிய மாணவர் பட்டப் படிப்பு படிக்கவும் போட்டித் தேர்வுகளில் வெற்றி பெறவும் ஆட்சி பணி தேர்வில் தேர்வாகி நாட்டின் பல்வேறு மாநிலங்களில் ஆட்சி தலைவர்களாகவும் பல்வேறு அரசு துறைகளில் தலைமை அதிகாரிகளாகவும் அமைச்சர் பெருமக்களுக்கு தலைமை ஆலோசகர்களாகவும் உருவாக்கினார். சைதையார் மாநகர தந்தையாக இருந்த போது ஆற்றிய அரும்பெரும் கல்வி சேவைகளைக் காண்போம்.

### தலைவர்களை உருவாக்கும் தலைவர்

ஜான் மேக்ஸ்வல் என்ற மேனாட்டு அறிஞர் ஒரு தலைவன் என்பவன் வெறும் தொண்டர்களை மட்டும் உருவாக்குவதில்லை அவன் பல தலைவர்களை உருவாக்குவான் என்றான். ஆம். சைதையார் என்ற தலைவர் வெறும் ஆட்டு மந்தைகளை, தலையாட்டி பொம்மைகளை, ஜால்ரா கோஷ்டிகளை தன் ஆதரவாளர்களாக வைத்துக் கொள்ளவில்லை. அவர்களை தனது அடிப் பொடிகளாக உருவாக்கவில்லை. அவர் பல இளம் தலைவர்களை உருவாக்கினார். அவர்களை நாடெங்கும் தலைமை பொறுப்பேற்கவும் சிறந்த மனித நேயம் கொண்ட நிர்வாகம் செய்யவும் அனுப்பினார். அவர் இப்போது தலைவர்களின் தலைவராக விளங்குகிறார். இந்த தலைவர்களை பள்ளி

*மாணவர்கள் என்ற நிலையில் இருந்து விதை நெல்லை பாதுகாப்பது போல பாதுகாத்து வளர்த்து ஆளாக்கினார். அவர் சென்னை மாநகராட்சி மேயராக இருந்த போது எண்ணற்ற திட்டங்களைச் செயல்படுத்தி மாணவர்களை மாண்புடையோராக வளர்த்தெடுத்தார்.*

***கனவை நனவாக்குவோனே தலைவன்***

*தலைவன் என்பவன் கனவுகளை மக்கள் மனதில் விதைத்து அவர்களை கற்பனையில் மிதக்க விடுபவன் அல்ல. சிறந்த தலைவரும் நல்ல நிர்வாகியும் அப்பழுக்கற்ற மனமும் படைத்த சைதையார் தன்னை நம்பிய மக்களின் கனவுகளை நனவாக்கி அவர்களுக்கு உண்மையான நல்வாழ்வை அளித்தார். மாணவர்களின் இலட்சியங்களை இலட்சங்களாக மாற்றி தன் வீட்டு பெட்டகத்தில் பதுக்காமல் அந்த இலட்சியங்களை சாதனைகளாக்கி தனது நாணயத்தை காப்பாற்றினார். செயல்திறன் மிகுந்த சைதையார் எந்த ஒரு திட்டத்தையும் ஏட்டளவில் வைத்ததே இல்லை. எல்லாமே நடைமுறைக்கு கொண்டு வரப்பட்டு சாதனைகளாக்கி அவரது புகழ்பாதையில் மைல்கற்களாக நிற்கின்றன. இதற்கு அவரது மன உறுதியும், செயல் திறனும் முக்கிய காரணங்களாகும்*

*வினை திட்பம் என்பது மனத்திட்பம் ஆகும். மன உறுதி உடைய ஒருவரால் மட்டுமே இந்த ஊழல் மிகுந்த காலத்தில் நேர்மையாகவும் தொண்டு மனப் பான்மையுடனும் மக்களுக்கு சேவை செய்ய முடியும். அவ்வாறு வாழ்ந்து காட்டி வழி காட்டும் ஒளிவிளக்காக விளங்கும் சைதையார் மாநகரத் தந்தை என்ற தலைமை பொறுப்பை ஏற்ற போது அந்த பதவி அவரால் அழகு பெற்றது; பெருமை பெற்றது.*

***சைதையார் ஊர் நடுவே பழுத்த மரம்***

*பொது நல சேவையில் ஆர்வம் உள்ள ஒருவருக்கு தலைமை பொறுப்பு கிட்டும்போது அது ‘பழ மரம் உள்ளூர் பழுத்தற்றால்’ என்ற வள்ளுவரின் வாக்கிற்கு இலக்கணம் ஆகின்றது. நல்ல கனி தரும் மரம் ஊரின் உள்ளே இருந்தால் அதனால் பலரும் பயன் அடைவர். அந்த மரத்தின் பழம்*

*பலரது பசியையும் தீர்க்கும். அவர்களுக்கு ஆரோக்கியத்தை அளிக்கும். அதுபோல தொண்டு மனப்பான்மையும் நேர்மையும் கொண்ட சைதையாருக்கு மாநகரத் தந்தை பொறுப்பு கிடைத்ததும் சென்னை மாநகரம் சீரும் சிறப்பும் பெற்றது.*

***சென்னை அரசு பள்ளி மாணவன் நான்***

*நல்லறிவு படைத்த சான்றோர் தமக்கான திட்டங்களைத் தாமே தீட்டி அவற்றிற்கான செயல் முறைகளையும் கண்டறிவர். அது போல சைதையார் அதுவரை இருந்து வந்த திட்டங்களை செம்மையாக நிறைவேற்றியதோடு நிமிடத்துக்கு ஒரு முறை புத்தம் புதிய திட்டங்களை தீட்டி சுறுசுறுப்பாக அவற்றை நிறைவேற்றி அரசு பள்ளி மாணவர்களின் கல்வித்தரத்தை உயர்த்தினார். நான் ஜெ என் யு மாணவனாக்கும்; நான் பிட்ச் பிலானி மாணவனாக்கும் என்று சொல்வதைப் போல நான் சென்னை அரசு பள்ளி மாணவனாக்கும் என்று சொல்லி பெருமைப் படும்படி அவர்களை கம்பீரமாக தலை நிமிர்ந்து நடக்கச் செய்தவர் சைதையார்.*

***படித்துகொண்டே இருக்கும் சைதையார்.***

*ஒரு திறமையான நிர்வாகியும் நேர்மையான மக்கள் தலைவருமான சைதையார் நல்ல தலைவருக்குரிய அனைத்து இலட்சனங்களும் அமையப் பெற்றவர். நல்ல தலைவர் எப்போதும் புதிதாக அறிவதில் நாட்டம் கொண்டிருப்பார்.* ***A good leader never stops learning*** *என்கிறார் ஒரு அறிஞர். சைதையாரும் எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப்பொருளின் மெய்ப்பொருள் குறித்து அறிந்து வரச் செய்வார். அது தன் மக்களுக்கு, மாணவர்களுக்கு பயன்படும் விதம் குறித்து ஆலோசிப்பார். பின்பு உடனே அதனை நடைமுறைப்படுத்தும் திட்டங்களில் இறங்கி விடுவார். மாநகராட்சி மாணவர்களால் போட்டி தேர்வுகள் எழுத இயலாது என்ற கெட்ட பெயரை மாற்ற துடித்தார். அவர்களுக்கு தேவையான பயிற்சிகளை அளிக்க முடிவு செய்தார், நினைத்தார்; முடித்தார்.*

***அரசு பள்ளியில் அனைத்து பயிற்சிகள்***

*கல்வி ஒளிவிளக்கை போன்றது அறியாமையால் இருண்டு கிடக்கும் வாழ்க்கைக்கு அறிவு என்னும் திருவிளக்கை ஏற்றுவது கல்வியே ஆகும். இந்த கல்வி இன்று வசதி படைத்தோருக்கு ஒரு விதமாகவும், ஏழை எளியோருக்கு வேறு விதமாகவும் கிடைக்கிறது. கல்வி வசதி பெறுவதில் ஏழைப் பணக்காரன் என்ற பாகுபாடு இருக்கக் கூடாது என்பது சைதையாரின் திண்ணமான எண்ணம். ஏழை மாணவனும் முதல் வகுப்பில் இருந்து ஆங்கிலக் கல்வி பெற வசதிகள் செய்து கொடுத்தார். மழலையருக்கு கல்வி உபகரணங்கள் வாங்கித் தந்தார். அரசு பள்ளியில் படிக்கும் ஏழை மாணவனுக்கும் கணினி பயிற்சி அளிக்க ஏற்பாடுகள் செய்தார்.*

***கல்லாமையை இல்லாமை ஆக்கினார்***

***ஒரு நல்ல தலைவனுக்கு இருக்க வேண்டிய சிறந்த பண்பு தன் மக்களை தன் உயிரினும் மேலாக நேசிப்பதும் அவர்களின் முன்னேற்றத்துக்கு உதவுவதும் ஆகும்.*** *இந்த தலைமை பண்பு சைதையாருக்கு இருந்ததால் அவர் இளம் மாணவர்களை நாட்டின் வருங்காலத் தூண்களாகக் கருதி அவர்கள் உலக அரங்கில் ஒளி வீச புதிய திட்டங்களை மின்னல் வேகத்தில் தீட்டி செயல்படுத்தினார். மாணவர்களின் கல்வியில் ஏழை பணக்கார வித்தியாசம் இருக்கக்கூடாது என்பது* ***சமத்துவச் செம்மல் சைதையாரின்*** *தாரக மந்திரம் ஆகும்.*

*பணம் படைத்தோனின் உலகம் எல்லாவற்றையும் பணத்தைக் கொண்டே எடை போடுகிறது. அதுபோல ஏழையின் உலகம் தன் வறுமையைக் கொண்டே தன் இல்லாமையை கணக்கிடுகிறது. அதனால் ஏழையின் பிள்ளைகள் கல்லாமை என்ற இருளில் தள்ளப்படுகிறனர். பொது சேவையை தன் இன்னுயிராக போற்றும் சைதையார் பணம் இல்லாததால் இந்த உலகில் தனக்கு எதுவும் கிடைக்காது என கலங்கும் ஏழை பிள்ளைகளுக்குக் கல்வி துறையில் எல்லா வசதிகளையும் அளிக்க ஆவண செய்தார். கல்லாமையை இல்லாமல் போக்குவோம் என்ற முடிவுடன்*

*ஏழைகள் படிக்கும் அரசு பள்ளிகளுக்கு அனைத்து வசதிகளும் செய்தார். இந்தப் பிள்ளைகளுக்கு அரசு பள்ளியில் தனி பயிற்சி, வழி காட்டுதல் பயிற்சி, கணினி பயிற்சி, தொழிற்கல்விக்கான பயிற்சி, போட்டித் தேர்வு பயிற்சிகளில் முன்னுரிமை என அனைத்துவகை பயிற்சிகளும் பெறச் செய்தார்.*

***சமத்துவச் செம்மலின் சரி விகிதக் கல்வி***

*விவேகானந்தர் ''என்னிடம் முப்பது இளைஞர்களை கொடுங்கள் இந்த பாரதத்தை மாற்றி காட்டுகிறேன்'' என்றார். ஆனால் சைதையார் யாரிடமும் போய் இவ்வாறு கேட்கவில்லை அவரே திறன்மிகு இளைஞர் படையை உருவாக்கினார். அரசு பள்ளியில் படித்து வரும் மாணவர்கள் சிறந்த விஞ்ஞானிகளாக வரவும் அரசு நிர்வாகத்தில் முக்கிய பங்கேற்கவும் அவர்களுக்கு பல பயிற்சிகள் அளித்தார். ஆசிரியர்களுக்கு ஆங்கில மொழி பயிற்சியும் கணினி பயிற்சியும் வழங்க ஏற்பாடுகள் செய்தார். தலைமை ஆசிரியர்களும், கல்வி அதிகாரிகளும் வெளிநாடு சென்று களப்பயிற்சி பெறும்படி அனுப்பி வைத்தார். கல்விக் கூடங்களில் கல்வியும் கலையும் விளையாட்டும் மாணவர்களுக்கு சரி விகிதத்தில் கற்பிக்க ஆவண செய்தார். கல்வி கூட்டத்தின் உள்கட்டமைப்பு வசதிகளை பெருக்கி மாணவர்களுக்கு மனநிறைவு தரும் சூழலை ஏற்படுத்தினார். இவற்றை இனி விரிவாக ஒவ்வொன்றாக காணலாம்*

***நினைத்ததை முடிக்கும் திறன் பெற்ற சைதையார் தான்***

*எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்*

*திண்ணியராகப் பெறின்*

*என்ற வள்ளுவரின் வாக்குப்படி திட்டமிட்ட செயல்களை செய்து முடிப்பதில் உறுதியாக இருப்பார். அதனால் பல்வேறு தடைகளுக்கு இடையில் அவர் அவந்தி நிறுவனம், அமெரிக்க இந்தியன் ஃபௌன்டேஷன் மற்றும் இ சி வித்யா அமைப்புகளுடன் இணைந்து அரசு பள்ளி மாணவர்களுக்கு பல்வேறு கல்வி பயிற்சிகள் அளித்தார்.*

**விளையாட்டுக் கல்வி**

*மாணவர் என்றாலே மாட்சிமை உடையோர் என்பது பொருள். அவர்களுக்கு மன நலமும் சிறக்க வேண்டும். உடல் நலமும் சிறக்க வேண்டும். உடல் நலத்துக்கு தேவையானது விளையாட்டும் உடற் பயிற்சியும் ஆகும். நம்நாட்டு சித்தர் பெருமக்கள் உடல் நலம் பேணுவதை உயிர் நலம் காப்பதாக கருதிப் போற்றினர்.*

*'உடம்பால் அழியின் உயிரால் அழிவார்'' என்றும்*

*'உடல் வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'*

*என்றும் உடலைப் பேணுவதன் அவசியத்தை எடுத்துரைத்தனர். சைதையார் பதினைந்து நடுநிலைப் பள்ளிகளில் விளையாட்டு பூங்கா அமைக்கிறார். அங்கு பிள்ளைகள் தம் விளையாட்டு வகுப்புகளில் ஓடி பிடித்து விளையாடுகின்றனர். வியர்வை வடிய ஓடி விளையாடும்போது உடம்பு காற்றை போல இலகுவாகி நல்ல பசி எடுக்கும். வளர்கின்ற வயதில் அவர்கள் நன்றாக சாப்பிட இந்த விளையாட்டு பூங்கா உதவுகின்றது. தனியார் பள்ளிகளில் மாணவர்களை விளையாட விடுவதில்லை. அவர்கள் கீழே மேலே விழுந்து கால் கையில் சிராய்ப்பு ஏற்பட்டால் கூட அவர்களின் பெற்றோர் வந்து ஏன் என் பிள்ளைகளுக்கு அடிபட்டது என்று ஆசிரியரை திட்டுகின்றனர். இதனால் அங்கு பிள்ளைகளை கையை கட்டி வாய் பொத்தி உட்கார்த்தி வைக்கின்றனர். அதனால் அவர்கள் பல ஜீரனக் கோளாறுகளாலும் மலச் சிக்கலாலும் அவதிப்படுகின்றனர். பெற்றோர் என் பிள்ளைகள் இது சாப்பிடுவதில்லை அது சாப்பிடுவதில்லை என்று ஆரோக்கியம் குறித்து கவலை படுகின்றனர்.*

**விளையாட்டு உபகரணங்கள்**

***நித்தம் நித்தம் ஒரு புத்தம் புதிய திட்டம் தீட்டுவதில் வல்லவரான சைதையார்*** *அதை செயல்படுத்துவதிலும் துடிப்பாக இருந்தார். அவர் உடல் பாதுகாப்பின் பெருமையை நன்கு உணர்ந்தவர் என்பதால் உடனே மாணவர்களுக்கு பல்வேறு விளையாட்டுக்களில் ஆர்வம் உண்டாக்க விரும்பினார். விளையாட்டு உபகரணங்களை வாங்கி அரசு பள்ளிகளுக்கு அளித்து மாணவர்களை வெவ்வெறு*

விளையாட்டுகளிலும் உடற்பயிற்சியிலும் ஈடுபட உற்சாகம் ஊட்டினார்.

உடம்பை யோக சாதனமாக்கும் வித்தை தெரிந்த சைதையார் தன்னை போல் பிறரை நேசி என்ற மனப்பான்மையுடன் செயல்படுவதால் தன்னைப் போல மாணவர்களும் ஆரோக்கியமாக இருப்பதை விரும்பினார். அரசு பள்ளிகளுக்கு விளையாட்டு உபகரணங்கள் வாங்க ஆவண செய்தார். சென்னை மாநகராட்சிக்குட்பட்ட அனைத்து உயர்நிலை மற்றும் மேல்நிலை பள்ளிகளிலும் விளையாட்டு உபகரணங்கள் வாங்கப்பட்டன. இதனால் சும்மா ஓடி பிடித்து விளையாடிக் கொண்டிருந்த மாணவர்கள் அதன் பிறகு ஷட்டில், கிரிக்கெட், ரிங்க் பால் என்ற பந்து வளையம், கால் பந்து, எறி பந்து போன்ற விளையாட்டுகளில் குழு குழுவாக ஈடுபட்டனர். இந்த விளையாட்டுகளால் அனைத்து மாணவர்களும் ஏதேனும் ஒரு விளையாட்டில் ஆர்வமாக ஈடுபட முடிந்தது. இனி அவர்கள் பெரியவர்களாகி பரபரப்பான வாழ்க்கையில் அடியெடுத்து வைக்கும் காலங்களிலும் சோர்ந்து போகும் உடலும் உள்ளமும் குதூகலிக்க பள்ளியில் விளையாடிய விளையாட்டுகளை விளையாடுவது உறுதி. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் பள்ளி காலங்களில் விளையாட்டில் ஆர்வமாக இருப்பவர்கள் பின்னரும் அந்த விளையாட்டை தொடர வாய்ப்பு இருக்கின்றது. முந்தைய காலங்களில் இந்த வாய்ப்பு இல்லையென்றாலும் இந்த காலத்திலும் இனி வரும் காலத்திலும் பெரியவர்கள் விளையாட்டுகளில் ஈடுபட வாய்ப்புக்கள் பிரகாசமாக உள்ளன. எனவே இந்த விளையாட்டு கருவிகள் ஆரோக்கியமான தமிழ் குடிமக்களை உருவாக்கும் அரும் பெரும் பணியை செய்கின்றன.

**வெற்றியாளருக்கு பரிசுத்தொகை**

***வெற்றி மீது வெற்றி வந்து என்னைச் சேரும்***

***அதை வாங்கித் தந்த பெருமை எல்லாம் உன்னைச் சேரும்***

என்று மாணவர்கள் சைதையாரை மகிழ்ந்து பாராட்டி நன்றி தெரிவிக்கும்படி வெற்றியாளருக்கு பரிசுகள் வழங்கினார். தேசிய அளவிலும் மாநில அளவிலும் மாணவர்கள் விளையாட்டுப் போட்டிகளில் பரிசுகள் பெற்று வந்தால் அவர்களை ஊக்குவிக்க லட்ச ரூபாய் ஊக்கத்தொகை வழங்கும் திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார். இந்த பரிசு வெற்றியாளர்கள் மேலும் ஊக்கம் பெறவும் அவர்கள் அதிகமாக உழைத்து பயிற்சி செய்து மேலும் பல பல பரிசுகளைப் பெற்று நாட்டுக்கும் வீட்டுக்கும் பெருமை தேடி தரவும் உதவும் என்பதனால் பெருந்தொகையை பரிசுத் தொகையாக வழங்கினார்.

**பல்வேறு பயிற்சிகள்**

விளையாட்டுக்கு அடுத்த படியாக நீச்சல் வளர் இளம்பருவத்தினருக்கு நல்ல உடல்வலிமையை தரக்கூடிய பயிற்சி ஆகும். அரசு பள்ளிகளில் நீச்சலில் ஆர்வமும் ஈடுபாடும் உள்ள மாணவர்களை தெரிவு செய்து மை லேடி பார்க்கில் உள்ள நீச்சல் குளத்தில் தேர்ந்த பயிற்சியாளரை கொண்டு மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. சிறப்பாக நீந்தும் மாணவர்கள் போட்டிக்கு அனுப்பப்பட்டு பரிசுகள் பெற்று வாங்கி வருகிறார்கள். இதனால் அவர்கள் மட்டுமல்லாது பள்ளிகளும் பெருமை அடைகின்றன. எந்தெந்த வகையில் எல்லாம் மாணவர்களுக்கு நல்ல பயிற்சியும் கல்வியும் அளிக்க முடியுமோ அந்தந்த வகையில் எல்லாம் சைதையார் அவர்களுக்கு நல்ல நல்ல திட்டங்களை அறிமுகம் செய்தார். ஒல்லும் வகையெல்லாம் நல்லது செய்து ஒல்காப் புகழ் உடையவராய் வாழும் சைதையார், மாணவர்கள் ‘வளர்ந்து வரும் உலகத்தின் வலது கையாக’ இருப்பதை உணர்ந்தவர். அதனால் அந்த வலக்கையை வலுப்படுத்தி நாட்டின் எதிர்கால நம்பிக்கையை அதிகமாக்குகிறார்.

**விளையாட்டுப் போட்டிகள்**

தமிழ்நாட்டின் மாநில விளையாட்டான சடுகுடு இன்று கபடி என்ற பெயரில் தேசிய விளையாட்டாக மலர்ந்துள்ளது. கபடி விளையாடுவதில் தேர்ச்சி பெற்ற

*மாணவர்களை கொண்டு மாநகராட்சி பள்ளிகளுக்கு இடையே போட்டிகள் நடத்தப்பட்டு வெற்றி பெற்ற குழுவினருக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. இதைப் போல வேகமாக ஓடக் கூடியவர்களுக்கு பயிற்சி அளித்து மாநகராட்சி பள்ளிகளுக்கு இடையே ஓட்டப் பந்தயம் நடத்தப்பட்டது. வெற்றி பெற்றவர்கள் பரிசுகள் பெற்றனர். இதனால் பள்ளிகளுக்கு இடையே நல்ல நட்புறவும் புரிதலும் கலந்துறவாடும் பண்பும் ஏற்பட்டது. நன்றாக விளையாடியவர்கள் தங்கள் படிப்பிலும் கெட்டிக்காரர்களாகவே இருந்தனர்.*

***மாணவிகளுக்கு சதுரங்கப் பயிற்சி***

*தனக்கென சிந்திக்கும் போது அறிவையும் பிறருக்காக சிந்திக்கும்போது இதயத்தையும் பயன்படுத்துகிறவன் எவனோ அவனே நல்ல தலைவன் ஆவான் என்றார் ரூஸ்வெல்ட். அத்தகைய நல்ல பண்புகளை கொண்ட சைதையார் மாணவர்களுக்காக சிந்திக்கும் போது பல விளையாட்டுக்களை அவர்களுக்கு கற்றுக் கொடுக்க ஆவண செய்தார். அதைப் போல பெண்களுக்காக சிந்திக்கும் போது அவர்களின் புத்திக் கூர்மைக்கு ஏதுவான சதுரங்க பயிற்சியை நடைமுறைப்படுத்தினார். தன் மகளுக்கு ஒரு தகப்பன் எதை செய்வானோ அதை செய்தார். வெளியே விளையாட்டு திடலுக்கு வந்து விளையாட விருப்பமில்லாத பெண்கள் உள் விளையாட்டு அரங்கில் சதுரங்க பயிற்சி பெற்றனர். மேல்நிலைப்பள்ளியில் மூளைத் திறனை அதிகரிக்கும் சதுரங்க பயிற்சி மாணவிகளுக்கு அளிக்கப்பட்டது*

***நாடென்ன செய்தது எனக்கு***

***என கேள்விகள் கேட்பது எதற்கு***

***நீ என்ன செய்தாய் அதற்கு என***

***நினைத்தால் நன்மை உனக்கு***

*என்று கவிஞர் பாடியது போல பலரும் இந்த நாடு எனக்கு என்ன செய்தது என்று கேட்டு வீணே பழி சுமத்தும் இந்நாட்களில் நாம் நம் நாட்டுக்கு என்ன செய்தோம் என்ற வினாவை எழுப்பி என் மாணவர்களுக்கு நான் பலவித சிறப்பு பயிற்சிகளை அளிப்பேன்; அதன் மூலமாக என் நாட்டுக்கு*

*துடிப்புள்ள பல அறிவார்ந்த இளைஞர்களை அளிப்பேன் என்ற முனைப்புடன் சைதையார் பல திட்டங்களை செயற்படுத்தினார்.*

**வழிகாட்டும் பயிற்சிகள்**

*சைதையார் கையில் இருந்த மேயர் பதவியின் மதிப்பையும் மகத்துவத்தையும் நன்கு உணர்த்தும் வகையில் அவர் பல சவால்களை ஏற்று அவற்றை சாதனைகளாக மாற்றினார். ஆளுமை இல்லாதவன் கையில் இருக்கும் அதிகாரம் பேடி கையில் உள்ள வாளை போன்றது என்றார் வள்ளுவர். அதிகாரம் என்பது ஒரு நாள் தன் கையில் இருந்தாலும் அதைக் கொண்டு மக்களுக்கு நல்ல பல திட்டங்களை தீட்டி சட்டங்களை இயற்றி அவர்களை வாழ்விக்க முடியும் என்பதை நாடோடி மன்னன் படத்தில் எம்.ஜி.ஆர். நடித்து காட்டியிருப்பார். அவரது சீரிய தொண்டரான சைதையார் தான் மேயராக இருந்த ஐந்து ஆண்டும் தன் அதிகாரத்தைக் கொண்டு சோம்பேறிகளை சுறுசுறுப்பாக செயல்பட வைத்தார். அதனால் அவர் அரசுப்பள்ளிகளுக்கு தீட்டிய தீட்டங்களும் உடனே செயல் வடிவம் பெற்றன.*

*அரசு பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் எதற்கும் பயன்பட மாட்டார்கள் என்ற எண்ணத்தை மாற்றி அவர்களுக்காக பல பயிற்சிகளை அளித்து, வள்ளுவரின்*

**தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சி தன்**

**மெய் வருத்தக் கூலி தரும்**

*என்ற வாக்கின்படி அவர்கள் அரசின் உயர்பதவிகளை பெற போட்டி தேர்வுகளுக்கு பயிற்சி அளித்தார். தனியார் நிறுவனங்கள் மூலமாகவும் பயிற்சிகள் அளிக்க திட்டம் வகுத்து விரைந்து செயல்படுத்தினார். இந்தக் காலகட்டத்தில் மாநகராட்சி பள்ளிகளில் நாம் படிக்கவில்லையே என்று தனியார் பள்ளி மாணவர்கள் ஏங்கும் அளவுக்கு அவர் நல்ல பல முன்னேற்ற திட்டங்களை செயல்படுத்தினார்.*

***தனியார் நிறுவனம் வழங்கிய பயிற்சி***

*சைதையாரின் புதிய சிறப்பு திட்டங்களால் மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்களில் 250 பேரை தெரிவு செய்து அந்த நிறுவனம் மூலமாக அறிவியல் பாடங்களில் சிறப்புப் பயிற்சி நடத்தப்பட்டது. இப்பயிற்சி பெறுவோர் நூற்றுக்கு நூறு வாங்கி மருத்துவம், பொறியியல் போன்ற தொழிற் கல்வி படிப்புகளில் சேர உதவியாக இத்திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார். இதை போலவே பத்தாம் வகுப்பு படிக்கும் மாணவர்களுக்கு சிறப்பு பயிற்சி அளிக்கப்பட்டது. இப்பயிற்சி மண்டலத்துக்கு ஒரு பள்ளி வீதம் பத்து பள்ளிகளில் சனிக்கிழமைகளில் நடைபெற்றது.*

*தனியார் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் +2 முடித்ததும் என்னென்ன படிப்புகள் [கோர்சுகள்] படிக்கலாம் என்பதை அறிந்து கொள்வதற்காக வழிகாட்டி வகுப்புகளுக்கு போவதுண்டு. இதற்கு பெரும் பொருட்செலவு ஏற்படும். இதனால் நமக்கு வழிகாட்ட ஒருவரும் இல்லையே என ஏங்கி இருந்த மாணவர்களுக்கு மத்தியில் 'இதோ நான் இருக்கிறேன். கலங்காதீர்கள்' என அபயக் குரல் கொடுத்து ஆபத்பாந்தவனை போல வந்து வழிகாட்டினார் சைதையார். மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுக்கு பண வசதி இல்லாத காரணத்தால் அவர்களின் எதிர்காலம் கேள்விக்குறியாகி விடக் கூடாது என்பதனால் பல்வேறு வகுப்புகளுக்கும் பயிற்சிகளுக்கும் அவர் ஏற்பாடு செய்தார். மருத்துவம், பொறியியல் மற்றும் பட்டயக் கணக்காளர் படிப்புகளுக்கான நுழைவுத் தேர்வுக்கு தயாராக பயிற்சி வகுப்புகளை சைதையார் நடத்தினார். தாய் மொழியில் கல்வி பெற்ற மாநகராட்சி மாணவர்கள் தமது பாடங்கள் குறித்த சிந்தனை திறனும் ஆழமான புரிதலும் உடையவர்கள். அவர்கள் உயர்கல்வியில் சேர்ந்து ஆராய்ச்சி படிப்புகளுக்கு போய் மயில்சாமி அண்ணாதுரை, இஸ்ரோ தலைவர் கே.சிவன், அப்துல் கலாம் போல சிறந்த விஞ்ஞானிகளாக உருவாக வாய்ப்பு இருப்பதால் தனியார் நிறுவனங்களைச் சேர்ந்த பயிற்சியாளர்களை கொண்டு சிறப்பு பயிற்சி அளிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன.*

இந்திய குடிமைப்பணி தேர்வு மற்றும் தமிழ் நாடு தேர்வாணையத் தேர்வுகள் போன்ற போட்டி தேர்வுகளில் பங்கேற்கும் பட்டதாரி இளைஞர்களில் மாநகரசி பள்ளி மாணவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது. இந்த பயிற்சி மாநகரசி பள்ளிகளிலேயே நடத்தப்பட்டது.

**உயர் மதிப்பெண்ணுக்கு ஊக்கத்தொகை**

திருவள்ளுவர் ஊக்கமுடைமை என்ற அதிகாரத்தில் ஊக்கத்தோடு உழைப்பதன் மேன்மையையும் நன்மையும் விளக்குகிறார்.

**ஆக்கம் அதர் வினாய் செல்லும்**

**ஊக்கம் உடையன் உழை**

ஊக்கம் உடையவனின் இடத்திற்கு வழி கேட்டுக் கொண்டு அனைத்து செல்வமும் செல்லும் என்பது இக்குறளின் பொருள். சோர்ந்து கிடக்கும் மாணவருக்கு உற்சாகம் அளிக்கும் வகையில் ஊக்கத் தொகை அளிப்பது அவர்கள் படித்து கூடுதல் மதிப்பெண் பெறவும் மேல்படிப்புக்குச் செல்லவும் தூண்டுதலாக அமைகிறது. ஊக்கத் தொகையை சைதையார் மாநகராட்சி பள்ளிகளில் உயர்த்தி வழங்கினார். பத்தாம் வகுப்பில் முதல் மதிப்பெண் பெறும் மாணவருக்கு ரூ.1000 வழங்கப்பட்டது. பத்தாம் வகுப்பில் 400 மதிப்பெண்களுக்கும் அதிகமாக எடுக்கும் மாணவர்களுக்கு ஊக்கத்தொகை ரூ.1500 ஆக உயர்த்தப்பட்டது.

+2 வகுப்பில் பள்ளி அளவில் முதல் மதிப்பெண் எடுக்கும் மாணவருக்கு ஊக்கத் தொகை ரு.1000 உயர்த்தப்பட்டது. அது போல 1000 மதிப்பெண்ணுக்கும் அதிகம் எடுக்கும் மாணவர் ஒவ்வொருவருக்கும் ஊக்கத் தொகை 1500 ஆக உயர்த்தப்பட்டது.

**ஆசிரியர்களுக்கு ஊக்கம் அளித்தார்**

சைதையார் இந்த இழிநிலையை மாற்ற ஒரு நல்ல திட்டம் தீட்டினார். ஆசிரியர்களின் ஒத்துழைப்பு அவசியம் என்பதை உணர்ந்து அவர்களை கல்விப் பணியில் முழு

*ஒப்படைப்புடன் ஈடுபடச் செய்வதற்காக ஊக்கத்தொகையை அதிகரித்தார்.*

*பத்தாம் வகுப்பு மற்றும் பன்னிரெண்டாம் வகுப்பில் 100% தேர்ச்சி பெறும் வகையில் பயிற்றுவித்த ஆசிரியர்களுக்கு ஊக்கத்தொகை அதிகரிக்கப்பட்டது. இவர்கள் பள்ளி நிர்வாகத்தில் செம்மையாக பங்கேற்கும் வகையில் கணினி செயற்பாட்டை புரிந்துகொள்ள தனி பயிற்சி வழங்கப்பட்டது*

***இலவசச் சுற்றுலா***

*மாநகராட்சி மாணவர்களுக்கு வெளியுலக அறிவு தேவை என்பதால் திறன் மேம்பாடு நோக்கில் 25 பேர் தெரிவு செய்யப்பட்டு தேசிய சுற்றுலா அழைத்து செல்லப்பட்டனர். மேலும் 50 மாணவர்கள் வட இந்தியாவின் பல பகுதிகளுக்கு அழைத்து செல்லப்பட்டனர்.*

*"எல்லாம் இதன் பால் உள; இதன் பால் இல்லாததே இல" என்று திருக்குறளை வாழ்த்தியது போல சைதையார் தன் மாநகராட்சி பள்ளிகளில் மாணவர்களுக்கு எல்லா வசதிகளும் இங்கு உண்டு. இங்கு இல்லாத வசதிகளே இல்லை என்ற உயர் நியலியை உருவாக்கினார். மாநகராட்சி பள்ளிகளை பார்த்து தனியார் பள்ளிகள் பொறாமைப்படும் அளவுக்கு அனைத்து வசதிகளும் ஏற்படுத்தி கொடுத்தார்.*

***கண்காட்சி பார்வையிடுதல்***

*மாநகராட்சி மாணவர்களுக்கு நமது முன்னோர் வரலாறும் பண்பாடும் பற்றிய அறிவு அவசியம் என்பதால் அவர்களை கண்காட்சிக்கு அழைத்து சென்று காட்டவும் சைதையார் ஒரு திட்டம் கொண்டு வந்தார். வாரந்தோறும் ஒரு பள்ளியில் இருந்து 60 மாணவர்கள் என வரன் முறைப்படுத்தி இந்த கண்காட்சி சுற்றுலாவை ஒழுங்கமைத்தார். இதனால் இவர்களுக்கு பறவைகள் மற்றும் விலங்குகளையும் வரலாற்று சின்னங்களையும் கண்டறிந்தனர். உள்ளூரின் பெருமைகளைக் கூட மாணவர்கள் அறியாமல் இருப்பது அறியாமை மட்டுமல்ல அறிவீனமும் கூட என்பதால் சைதையார் இந்த திட்டத்தை அறிமுகம் செய்தார்.*

***அறிவியல் மையம்***

*தமிழகத்தை சேர்ந்த விஞ்ஞானிகளான அப்துல் கலாம், மயில்சாமி அண்ணாதுரை, நாகர்கோயில் சிவன், மோகனூர் சந்திரசேகரன் போன்றோர் தமிழ் வழி கல்வி பயின்று நாட்டின் அறிவியல் வளர்ச்சிக்கு அரும்பணி ஆற்றினர். அதுபோல நம் மாநகராட்சி மாணவர்களும் சுய சிந்தனையுடன் அறிவியல் தெளிவுடன் வளர்ந்து தாய்நாட்டுக்கு பெருமை தேடி தர வேண்டும் என்பதற்காக அவர்களை வாரந்தோறும் யுரேகா அறிவியல் மையத்துக்கு அழைத்து செல்லும் திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார்.*

***கலைப் பயிற்சி***

*வரலாறும் அறிவியலும் மட்டும் தெரிந்தால் போதுமா நம் பண்பாடு கலாச்சாரம் போன்றன தெரிய வேண்டாமா? எனவே தமிழ் கலாச்சாரத்தையும் பாரம்பரியத்தையும் நேரில் கண்டும் கேட்டும் அறிந்துகொள்ளும் வகையில் நடுநிலைப் பள்ளி மாணவர்கள் தட்சின சித்ரா கலைக்கூடத்துக்கு அழைத்து செல்லும் திட்டம் தொடங்கப்பட்டது.*

*சில மாணவர்களுக்கு படிப்பில் ஆர்வம் இருக்காது ஆனால் கலைகளில் ஆர்வம் உடையவராக இருக்கின்றனர். அவர்களுக்கு நுண்கலைகளை பயிற்றுவிக்க பத்து பள்ளிகளில் கலை கூடங்கள் உருவாக்கும் திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார். மேலும் முப்பது பள்ளிகளுக்கு இசைக்கருவிகளை வாங்கி கொடுத்து இசையார்வம் உள்ளவர்களுக்கு இசையை முறைப்படி பயிற்றுவிக்க இசை ஆசிரியர்களையும் பணி அமர்த்தினார். எல்லா சிப்பிகளையும் வளர விடுவோம் எதில் முத்து இருக்கும் என்று தெரியாது என்றார். தமிழண்ணல் சைதையார் அதனால் மாணவர்களின் எல்லா ஆர்வங்களுக்கும் ஊக்கம் அளித்தார். எந்த துறையில் மாணவர்கள் சிறப்பிடம் பெறுவார்களோ தெரியாது. ஆனால் ஏதேனும் ஒன்று அல்லது இரண்டு துறைகளில் அவர்கள் அனைவரும் வியத்தகு திறமை பெற்றவர்களாக வருவது உறுதி.*

### உள்கட்டமைப்பு வசதிகள்; பள்ளியின் சுத்தம் சுகாதாரம்

*அரசு பள்ளி என்றாலே ஓடுகள் உடைந்திருக்கும்; சுவரில் காரை பெயர்ந்திருக்கும்; கழிப்பறைகள் இருக்காது இருந்தாலும் அவை பூட்டிக் கிடக்கும்; ஆசிரியர்கள் பாடம் நடத்தமாட்டார்கள்; நூலக வசதி இருக்காது எனப் பலவாறாக புலம்பும் மாணவர்களுக்கு புத்துணர்ச்சி கொடுக்கும் வகையில் பள்ளிக்கூடத்தின் தோற்றத்தை சைதையார் மாற்றிக் காட்டினார். பள்ளிக்கூடங்கள் வெள்ளையடித்து தூய்மையாக காட்சி அளித்தன. கழிப்பறைகள் கட்டித் தரப்பட்டன. துப்புரவு பணியாளர்கள் நியமைக்கப்பட்டனர். சத்துணவு கூடங்கள் தூய்மையாக பராமரிக்கப்பட்டன. ஓட்டை உடைசல்கள் குப்பைகள் அப்புறப் படுத்தப்பட்டன. கல்வி உபகரணங்களும் விளையாட்டு உபகரணங்களும் வாங்கப்பட்டு மாணவர்களுக்கு பயன்படுத்தப்பட்டன.*

### அறிவொளி பரப்பும் நூலகம்

*மின்சாரம் இல்லாத நேரங்களில் மின்சாரம் வழங்குவதற்காக ஜெனெரேட்டர் பள்ளிகளுக்கு வழங்கப்பட்டது. நூல்களே நம்மை நன்நெறிப்படுத்தும் நெருங்கிய நண்பர்கள் என்பதால் நூலக அறை ஒவ்வொரு பள்ளியிலும் ஏற்படுத்தப்பட்டது. வழிகாட்டும் பயிற்சி மற்றும் போட்டி தேர்வுகளுக்கு பயிற்சிகள் பெறும் மாணவர்களுக்கு பொது அறிவும் நூல் வாசிப்பும் முக்கியம் என்பதால் சைதையார் இளைய தலைவர்களை உருவாக்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார். நூலகத்திற்கு என்று நூல்கள் வாங்கப்பட்டன. தரம் உயர்த்தப்பட்ட மூன்று உயர்நிலைப்பள்ளிகளுக்கு நூல்களும் நூலக தளவாட சாமான்களும் சேர்த்து வாங்கி நூலக அறை விரிவாக்கப்பட்டது.*

### பொது அறிவை வளர்க்கும் நாளிதழ்கள்

*ஒவ்வொரு வகுப்புக்கும் தனித்தனியாக நாளிதழ்கள் வாங்கப்பட்டு மாணவர்கள் அவற்றை வாசித்ததும் அவற்றில் வினாடி வினா நிகழ்ச்சி நடத்தப்பட்டு அவர்களுக்கு ஊக்கம் அளிக்கப்படுகிறது. மாணவர்களின் வாசிப்பு திறனை மேம்படுத்துவதில் சைதையார் அதிக அக்கறை எடுத்துக்கொண்டார். அவர்களின் உலக அறிவு வளரவும் பிற*

*நாடுகள் பிற மாநிலங்கள் மற்றும் அரசு திட்டங்கள் நவீன அறிவியல் கண்டு பிடிப்புகள் பற்றிய தெளிவு கிடைக்கவும் இந்த நூலக வாசிப்பை சைதையார் ஊக்குவித்தார். படிக்காத பெற்றோர் இருக்கும் வீடுகளில் பிள்ளைகளுக்கு போதிய உலக அறிவு கிடைக்காமல் போகலாம். ஆனால் இதை காரணம் காட்டி ஒருவரால் போட்டிகளில் சலுகை பெற இயலாது முயன்று உழைக்க வேண்டும் திருவள்ளுவர் கூற்றுப்படி*

***ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றி***

***தாழாது உஞற்று பவர்.***

*என்பதால் முயற்சி செய்தால் தன் தலைவிதியையும் கூட ஒருவர் மாற்றிவிடலாம். உலைவின்றி என்றால் சலிப்பின்றி என்பது பொருள். அலுக்காமல் சலிக்காமல் அயராது பாடுபடுவோர் தலைவிதியைக் [ஊழ்] கூட தோற்கடித்து விடுவர். எனவே உழைக்க தயாராக இருக்கும் மாணவர்களுக்கு 'உறுதுணையாய்' நின்றார் சைதையார்.*

*''**பகையில் துணையாய் பசியில் உணவாய்***

***இருந்தால் ஊருக்கு இலாபம்**''*

*என்பதை உணர்ந்து மாணவர்களின் அறியாமையை விரட்டி அறிவுப்பசிக்கு தீனி போட்டவர் சமத்துவச் செம்மல் சைதையார்.*

***ஆசிரியர்களுக்கும் பயிற்சிஅளித்தார்***

*மாநகராட்சி பள்ளிகளில் மாணவர்களை சொல்லி குற்றமில்லை அங்கு ஆசிரியர்களுக்கு ஒன்றும் தெரியாது அவர்களே மாணவர்களுக்கு பாடம் சொல்லி தராமல் பொழுதை போக்குகின்றனர் என்ற குற்றச் சாட்டு பரவலாக மாநிலம் முழுவதும் இருந்து வந்தது. இதற்கு முன் பொறுப்பில் இருந்தவர்கள் இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு ஆமாம் ஆமாம் காலம் கலிகாலம் என்று தலையாட்டி விட்டு சென்றுவிடுவர். ஆனால் பொறுப்புமிக்க தலைவரான சைதையார், மிட் ரோமினி வகுத்த இலக்கணத்தின்படி 'காரணங்கள் சொல்பவன் அல்ல தலைவன். காரணங்களை*

ஆராய்ந்து காரியத்தை செய்து தன் பொறுப்பை நிறைவேற்றுபவனே சிறந்த தலைவன்' என்றதன்படி உடனே பல திட்டங்களை தீட்டி ஆசிரியர்களுக்கு பல பயிற்சிகள் அளிக்க ஏற்பாடுகள் செய்தார்.

**ஆங்கிலப் பயிற்சி**

அரசு பள்ளி ஆசிரியர்களுக்கு ஆங்கிலம் தெரியாது அவர்களின் உச்சரிப்பு வேடிக்கையாக இருக்கும் என குற்றஞ்சாட்டுவோர் மத்தியில் அதையும் ஜெயித்து காட்டுவோம் என சவால் விட்டு ஆசிரியர்களுக்கும் உரிய பயிற்சிக்கு சைதையார் வழிவகை செய்தார். 'அறிவு அறிந்து ஆள்வினை இன்மையே பழி' என்பதால் அறியாத மொழியை அறிந்து அதனை சிறப்பாக ஆளும் தன்மையை அறியாததே ஒருவருக்கு பெரும் பழிச்செயல் ஆகிவிடும். ஆக ஆசிரியர்களுக்கு ஆங்கிலம் தெரியாதது குற்றம் அன்று அதை மேலும் அறிந்துகொள்ள முயலாததே குற்றம் என கருதிய சைதையார் இடைநிலை பள்ளி ஆசிரியர்களுக்கு மூன்று கட்டமாக பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்தார்.

ஆங்கிலப் பயிற்சி பெற்ற பின்பு ஆசிரியர்கள் தம் மாணவர்களுக்கு ஆங்கிலத்தில் சரியாகவும் அழகாகவும் பேசக் கற்றுத் தந்தனர். ஆங்கில உச்சரிப்புகளை முறையாகப் பயிற்றுவித்தனர். இலக்கணப் பிழையின்றி மாணவர்கள் ஆங்கிலத்தை எழுதவும் பேசவும் கற்றுக் கொண்டனர். மாணவர்களுக்கு ஆங்கில மொழி தன் வசமாயிற்று. அதன் மேலிருந்த பயமும் வெறுப்பும் அகன்றது.

மாநகராட்சி பள்ளிகளில் ஆங்கில வழி கல்வி முறை அறிமுகமானதால் ஐம்பது தொடக்கப் பள்ளி ஆசிரியர்களுக்கு டெக் மஹேந்திரா மூலமாக ஆங்கிலத் திறன் மேம்பாட்டுப் பயிற்சி முறையாக அளிக்கப்பட்டது. இனி இந்த பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் அந்த மாணவர்களுக்கு முதல் வகுப்பு முதற்கொண்டு ஆங்கிலத்தை நல்ல முறையில் கற்று தருவர். அம்மாணவர்கள் தனியார் பள்ளி மாணவர்களோடு போட்டி போடும் வகையில் அனைத்து துறைகளிலும் சிறப்பாக வருவார்கள்.

*ஆங்கில மொழி பயிற்சி தவிர இந்திரா நகரில் உள்ள தொடக்க பள்ளியில் ஆங்கில மொழிக்கான ஆய்வகமும் தொடங்கப்பட்ட்து. இன்றைக்கு இலட்சக் கணக்கில் கட்டணம் வாங்கும் தனியார் பள்ளிகளில் கூட ஆங்கில ஆய்வகம் கிடையாது. ஆனால் சைதையாரின் முயற்சியால் அரசு பள்ளியில் இருக்கிறது.*

*ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்ற பழமொழி மொழிக் கல்விக்கு மிகவும் பொருந்தும் என்பதால் தொடக்கப் பள்ளியிலேயே மாணவர்களுக்கு ஆங்கிலத்தை முறையாக உச்சரிக்கவும் பேசவும் கற்றுத்தர வேண்டும். இதனால் அறுபது பேரை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு அமெரிக்க தூதரகத்தின் ஒருங்கிணைப்போடு பயிற்சிகள் நடத்தப்பட்டன. மேலும் இவர்களில் ஒருவரை தெரிவு செய்து அவரை அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்தும் பயிற்சி பெற சைதையார் ஏற்பாடுகள் செய்தார். மாணவர் கல்வி விஷயத்தில் அவர் நூற்றுக்கு நூறு முயற்சி செய்து புதிய திட்டங்களை தீட்டி அவற்றை செயல்படுத்துவார்.*

***ஒழுக்கக் கல்வி***

*கடமை கண் போன்றது – ஒழுக்கம் உயிர் போன்றது. கடமையில் கருத்தாக இருப்பவனும் ஒழுக்கத்தில் சிறந்தவனாக இருக்க வேண்டும். இதைத்தான் அறிஞர் அண்ணா கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்றார். மாணவர் என்போர் மாண்பு உடையோர். மாண்பு என்பது ஒழுக்கத்தினால் கிடைக்கும் உயர்ந்த பண்பாகும்.*

***ஒழுக்கம் விழுப்பம் தரலான்; ஒழுக்கம்***

***உயிரினும் ஓம்பப் படும்***

*என்றார் வள்ளுவப் பெருந்தகை. ஒழுக்கம் எல்லா வகையான சிறப்புகளையும் தருவதால் ஒழுக்கத்தை ஒருவன் தன் உயிராகக் கருத வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகும். மாணவர்கள் வரலாறும் அறிவியலும் ஆங்கிலமும் படித்து நல்ல மதிப்பெண்கள் எடுத்தால் மட்டும் போதாது. அவர்கள் நல்ல பண்பாளராகவும் இருக்க வேண்டும் என்பதால் அதற்கும் மனிதநேய மாண்பாளர் சைதையார் ஒரு திட்டம்*

*தீட்டினார். அது தான் நற்பண்பு கல்வி. மனிதனை மனிதன் நேசிக்கும் பண்பு மாணவரிடம் வளர வேண்டும். பண்புடையார் பட்டுண்டு உலகு என்பது ஆன்றோர் வாக்கு. இந்த உலகம் நல்ல பண்புள்ள மனிதராலேயே இன்னும் இயங்கிக்கொண்டு இருக்கிறது. பகுத்து உண்டு பல்லுயிர் வளர்த்தல் மிகச் சிறந்த பண்பு. எனவே மாணவர் தமக்குள் அன்பு, இரக்கம், ஈகை போன்ற நற்பண்புகளை கொண்ட பண்பாளராக வளர்ந்து வருங்காலத்தில் இந்நாட்டின் விழுதுகளாகத் திகழ வேண்டும். இந்த நல்ல நோக்கத்தை நிறைவேற்ற வீசெட் நிறுவனத்தார் மூலம் நற்பண்பு கல்வி திட்டத்தை சைதையார் அறிமுகம் செய்தார். வளரிளம் பருவத்தினரிடம் இருக்கும் கோபம், படபடப்பு, ஆத்திரம் போன்றவற்றை இந்த நற்பண்பு கல்வி மூலம் சைதையார் செம்மைப்படுத்தினார்.*

***கணினி மயமாதல்***

*மாற்றம் ஒன்றே மாறாதது. மாறிவரும் உலகத்துக்கு ஏற்ப நாமும் மாறவில்லை என்றால் நம்மை விட்டுவிட்டு மற்றவர்கள் நமக்கு முன்னால் போய்விடுவர். நாம் பின்தங்கி விடுவோம். இதனை நன்குணர்ந்த சைதையார் உலக ஓட்டத்துக்கு ஏற்ப நம் மாணவர்களையும் தயார் செய்தார். வளர்ந்து வரும் கணினிச் சூழலுக்கு ஏற்ப மாநகராட்சி பள்ளிகளும் கணினியைப் பயன்படுத்த வேண்டும் என சைதையார் திட்டமிட்டார். வள்ளுவர் வாக்கிற்கேற்ப வாழ்ந்து வழி காட்டி வரும் சைதையார்*

***உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்***

***கல்லார் அறிவி லாதார்***

*என்ற திருக்குறளை நினைத்தார். ஒருவர் பல கல்வி படித்தாலும் உலகத்தோடு இணைந்து நடக்கவில்லை என்றால் அவர் எதுவும் படிக்காத அறிவு இல்லாதவராகவே கருதப்படுவார். எனவே, உயர்நிலை, மேனிலை பள்ளிகளிலும் மண்டல மைய பள்ளிகளிலும் அலுவலகப் பணித்திறனை மேம்படுத்த பள்ளிக்கு ஒருவர் என எண்பது கணினி ஆசிரியர்களை பணியமர்த்தினார். ஆறாம் வகுப்பு முதல் பத்தாம் வகுப்பு மாணவர்கள் வரை அனைவருக்கும்*

*கணினி அறிவு அவசியம் என தீர்மானித்து அவர்களுக்கு ஒப்பந்த முறையில் 38 கணினி ஆசிரியர்களை நியமித்தார். கணினி கற்பிக்க வேண்டி எண்பது ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர்.*

***நவீன வகுப்பறை [ஸ்மார்ட் க்லாஸ்]***

*மேனாட்டு மாணவர்களை போல தமிழ் நாட்டு மாணவர்களும் படிக்க வேண்டும் என விரும்பிய சமத்துவ செம்மல் சைதையார், கணினிகளைக் கொண்டு பாடம் நடத்தும் முறையை அறிமுகம் செய்தார். பதினான்கு பள்ளிகளில் கணினி மற்றும் ப்ரொஜெக்டர் முறையில் பாடம் கற்பிக்க ஸ்மார்ட் கிலாஸ் ரூம்கள் கட்டும் திட்டத்தை செயல்படுத்தினார். இப்போது "எவருக்கும் நாம் இங்கு இளைப்பில்லை காண் என்று கும்மியடி" என பாரதியார் பாடியது போல மாநகராட்சி பள்ளி மாணவர்கள் யாருக்கும் தாங்கள் இளைத்தவர்கள் இல்லை என்று பெருமிதத்துடன் உலா வரும் வகையில் அனைத்து வசதிகளையும் அறிமுகம் செய்தார். ஆசிரியர் ஸ்மார்ட் கிலாசின் முன் நின்று பாடத்தை விளக்க ஒலிபெருக்கி [மைக்] வழங்கினார். தலைமையாசிரியர் அறையில் வைக்கபடும் இந்த ஒலிபெருக்கி மூலமாக பள்ளி மாணவர்களுக்கு முக்கியத் தகவல்கள் அறிவிக்கப்பட்டன.*

***எண்ணிக்கையில் ஏற்றம்; தோற்றத்தில் மாற்றம்***

*அரசு ஏராளமான நலத்திட்டங்களை மாணவர்களுக்கு அறிவித்தும் மாநகராட்சி பள்ளிகளில் மாணவர்களின் எண்ணிக்கை குறைவதற்கு என்ன காரணம் என்று ஆராய்ந்த சைதையார் பெற்றோர் தமது வீடுகளுக்கு அருகில் இருக்கும் ஆங்கில வழியில் கல்வி கற்பிக்கும் மழலையர் பள்ளிகளில் தம் பிள்ளைகளை ஆரம்பத்தில் சேர்த்துவிடுவதை அறிந்தார். புற்றீசல் போல் ஆங்காங்கே முளைத்திருக்கும் ஆங்கில மழலையர் பள்ளிகள் இரண்டு ரைம்சும் மம்மி டாடி என்ற இரண்டு சொற்களையும் சொல்லி கொடுத்து ஆயிரக்கணக்கில் பணத்தை கறந்துவிடுகின்றன. பெற்றோரும் தம் பிள்ளைகள் மம்மி டாடி என்று அழைத்தவுடன் ஜென்ம சாபல்யம் அடைந்தது போல அகமகிழ்ந்து போகின்றனர்.*

*இந்த நிலையை மாற்ற வேண்டும் என்று முடிவு செய்தார் சைதையார். தரமான மழலையர் பள்ளிகளைத் தொடங்க திட்டமிட்டார். அதுவரை மாநகராட்சி நிர்வாகத்தில் முப்பது மழலையர் பள்ளிகள் மட்டுமே இயங்கி வந்தன. அவற்றை நூற்றி அறுபத்தி ஐந்தாக உயர்த்தினார். புதிதாக 135 மழலையர் பள்ளிகளை தொடங்கி மாணவர்கள் ஆரம்பக் கல்வி முதல் அரசு பள்ளிகளில் கற்க ஆவண செய்தார்.*

*அரசு பள்ளி என்றாலே இடிந்தும் உடைந்தும் பாசி படிந்தும் கிடக்கும் என்ற நிலையை மாற்றி ஆண்டுக்கொரு முறை வெள்ளை அடித்து பள்ளிகளில் தோற்றத்தை புதுப்பித்தார். குடிநீர் வசதி, கழிப்பறை வசதி, கழிப்பறை பராமரிப்பு ஆகியவற்றில் அதீத கவனம் செலுத்தியதால் மாணவர்களின் எண்ணிக்கை உயர்ந்தது. அரசின் திட்டங்களும் மக்களை போய் சேர்ந்தன. குழந்தைகள் தரமான கல்வி பெற்றனர். நாற்காலி, மேசை, கரும்பலகை போன்றவையும் ஓட்டை உடைசல் இன்றி ஆண்டு தோறும் பழுது பார்க்கப்பட்டன.*

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**

*மணிமேகலை என்னும் தமிழ் காப்பியம் பசிப்பிணியால் வாடுவோருக்கு அட்சய பாத்திரம் என்ற பாத்திரத்தை கொண்டு மணிமேகலை உணவு வழங்கிய கதையை விரிவாக விளக்கும். அதில் பசியால் நேரும் ஆபத்துக்கள் விளக்கப்படும். எனவே தான்*

***"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"***

*என்று பாராட்டினர். ஒரு காலத்தில் நம் முன்னோர் உணவை இலவசமாகவே கொடுக்க வேண்டும் அதனை விலைக்கு கொடுக்க கூடாது அது பாவம் என்றனர். முன்னோர் வார்த்தைகளை பொன்னே போல் போற்றும் புரட்சி தலைவர் எம்.ஜி.ஆரின் அரசு மாணவர்களுக்கு பள்ளிகளில் சத்துணவு திட்டத்தை அறிமுகம் செய்தது. அவரது வழியில் நடக்கும் அவரது அன்புத் தம்பி சைதையார் சத்துணவுத் திட்டம் மாநகராட்சி பள்ளிகளில் ஒழுங்காக செயல்படுகிறதா என்பதை கண்காணித்தார். மேலும் மாலையில் அமர்ந்து படிக்கும் மாணவர்களுக்கு தன் சொந்த பணத்தில் இருந்து*

சுண்டல் வழங்க ஏற்பாடுகள் செய்தார். வளரிளம் பருவத்தினருக்கு நல்ல பசி இருக்கும். அப்போது அவர்களுக்கு ஊட்டச்சத்து மிக்க உணவு வழங்க வேண்டும். பசி, பசி என்பவனை படி படி என்றால் அவனுக்கு பசியால் காது அடைக்கும்போது பிறர் சொல்லும் எந்த விஷயமும் அவன் காதில் ஏறாது. எனவே சைதையார் அரோக்கியமான, சத்துள்ள, பசி தாங்கக் கூடிய சுண்டலை மாணவர்களுக்கு வழங்கும்படி செய்தார்.

## இருப்பிடமும் சிறப்பு பயிற்சியும்

மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் சிலர் நன்றாக படித்தனர். ஆனால் அவர்களுக்கு வீட்டுக்கு போன பிறகு தனியே உடகார்ந்து படிக்க வசதியில்லை. வீட்டு சூழலும் தெருச் சூழலும் படிப்புக்கு உகந்ததாக இல்லை. அவர்களின் நிலை அறிந்த சைதையார், அவர்கள் தங்கிப் படிக்க இரண்டு விடுதிகளை கட்டினார். அவர்களுக்கு காலையும் மாலையும் உணவளிக்கவும் ஏற்பாடுகள் செய்தார். வார விடுமுறை அன்று மட்டும் தன் பெற்றோரை போய் பார்த்து வர செய்தார். இவர்களுக்கு சிறப்பு பயிற்சி அளிக்கவும் முடிவு செய்தார். இந்த மாணவர்கள் பள்ளியிலும் விடுதியிலும் கருத்தூன்றி படித்தனர். ''குறை ஒன்றும் இல்லை மறை மூர்த்தி கண்ணா, குறையொன்றும் இல்லை கோவிந்தா'' என்று இசைக்குயில் எம் எஸ் சுப்புலட்சுமி பாடியதை மெய்ப்பிக்கும் வகையில் மாணவர்களுக்கு எந்தக் குறையும் இல்லாமல் பார்த்துக்கொண்டார்.

## ஒரு தலைவன் இருக்கிறான் மயங்காதே

சென்னையின் இளஞ்சிறார்களும் வளரிளம் பருவத்தினரும் தமது கல்விநிலை உயரவும் உடல் ஆரோக்கியம் பெருகவும் மனநலம் சிறக்கவும் மாநகர் தந்தையான சைதையார் இருக்கும்போது எந்தக் கவலையும் இன்றி வாழ்கின்றனர். நல்ல தலைவன் இருக்கும் நாடு நல்ல தகப்பனை கொண்ட வீடு போல செழிப்பாகவும் மகிழ்ச்சியாகவும் விளங்கும். எனவே, புரட்சி தலைவர் தம் தத்துவப் பாடல் ஒன்றில் 'சைதையார் என்ற ஒரு தலைவன் இருக்கிறான் மயங்காதே மாணவனே' என்று அன்றே

*சொல்லி வைத்துவிட்டார். நேர்மையாக திட்டங்களை நிறைவேற்றியதால் லஞ்சம் ஊழல் கமிஷன் என்ற அரசியல் நாற்றங்கள் இல்லாமல் அவரது நிர்வாகம் மற்றவருக்கு வழிகாட்டுதலாக இருந்தது. ஒரு திட்டத்தை தவிர்ப்பதற்கான காரணங்களைத் தேடாமல் அதை முடிப்பதற்கான வழிகளை ஆராய்ந்து திறம்பட நிறைவேற்றிய செயல்வீரர் அவர். உண்மை, திறமை, நேர்மை, நல்லெண்ணம் என்ற நான்கு தூண்களில் சைதையாரின் புகழ் கோபுரம் உயர்ந்து உறுதியாக நிற்கிறது.*

## நூலாசிரியர் பற்றி



*முனைவர். செ. இராஜேஸ்வரி மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார். 1988 முதல் தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Eco Vision and Mission, Neuro Ophthalmology Articles போன்ற பல துறை சார்ந்த பனுவல்களை தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.*

*1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் [Associate editor] பணயாற்றினார். அப்போது ஜப்பானிய மொழியை தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் இன்று மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. அங்கு வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.*

*1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.*

*2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளிநாட்டவருக்கு தமிழ் கற்பிக்க பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றிய போது அங்கு வந்த வெளி மாநிலம் மற்றும் வெளிநாட்டைச் சேர்ந்த கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க Tamil for Non-Tamils என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சிபெரும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கும் வெளி நாட்டவருக்கும் ஆங்கிலமும் தமிழும் கற்பித்தார்.*

*தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். திராவிட இயக்கப் பாரம்பரியத்தில் வந்ததனால் இவர் திமுக, அதிமுக வரலாறு குறித்து அறிந்திருந்தார். குறிப்பாக எம்.ஜி.ஆர். பற்றிய தகவல்களை நிறைய தொகுத்து வைத்திருந்தார். தமிழ்க் கலையும் பண்பாடும் பற்றிக் கற்பிக்கும்போது தமிழ்நாட்டில் மேடைத்தமிழ், மேடை நாடகம், திரைப்படம் ஆகியன அரசியலில் உருவாக்கிய விதம் பற்றியும் விளக்கினார். அப்போது எம்.ஜி.ஆர். அரசியல் தலைவரான விதம் குறித்து மேலும் அறிய அமெரிக்க மாணவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர். அவர்களை எம்.ஜி.ஆர். படங்களைப் பார்க்க திரையரங்குக்கு அழைத்துச் சென்றார். திரை அரங்கில் ரசிகர்கள் காட்டிய ஆர்வமும் ஆர்ப்பரிப்பும் கண்டு கேட்டு வியந்து போய் எம்.ஜி.ஆர். குறித்து சில மாணவர்களும் பேராசிரியை ஒருவரும் ஆராய்ச்சி செய்ய தொடங்கினர். அவர்களின் ஆர்வம் கண்டு எம்.ஜி.ஆர். தகவல் மையம் ஒன்றைத் தொடங்கி அவர் குறித்த நூல்களையும் அவரது படங்களையும் சேகரித்து வைத்தார். பின்னர் அமெரிக்க மாணவர்கள் இந்தியாவுக்கு வருவது குறைந்ததால் இத்திட்டம் தொடர்ந்து செயல்பட முடியவில்லை.*

*எம்.ஜி.ஆர். பற்றி ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100 என்ற தலைப்பில் விகடன்.காமில் முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www.tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகளை வெளியிட்டு வருகிறார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஒரு நூல் எழுதும் முயற்சியில் தகவல்களை திரட்டி வருகிறார். எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம்.*

1. *வெற்றித்திருமகன் என்ற பெயரில் தொடங்கும் வரிசை நூல்கள் ஆகும்,*
2. *எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம்,*
3. *சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்),*
4. *வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட,*
5. *மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர்.,*
6. *எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி,*
7. *எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி,*
8. *ஒளி விளக்கு எம்.ஜி.ஆர்.,*
9. *வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I,*
10. *நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I],*
11. *பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II].*

*பனிரெண்டாவதாக இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். என்ற இந்நூல் வெளிவந்துள்ளது.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் 'பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள் மற்றும் உன்னொடு உரையாடுதல்' திட்டிவாசல் பெண்ணொருத்தி என்ற கவிதை நூல்களை இவர் ஆங்கிலத்தில் "Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You" Language of Love, A Lady at the little gate, என்று மொழி பெயர்த்துள்ளார். இந்நூல்களை சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இவர் எழுதிய சிறுகதைகள் 'அமராவதியின் காதல்' என்ற பெயரில் அமேசானில் வெளிவந்துள்ளது. இவர் எழுதி வரும் ஆய்வுக் கட்டுரைகள் நெருஞ்சி என்னும் இலக்கிய இதழில் வெளிவருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய "என்னோட ராசி நல்ல ராசி" என்ற தொடர் வந்து கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில் 'மரங்களே திருக்கோயில்களின் முன்னோடி, காளியும் தேவியும்' போன்ற ஆன்மீக கட்டுரைகள் வெளிவருகின்றன.*

